தாயின் காலடி வெற்றிக்கு முதல்படி- இதுவே
உழைப்பாளியின் கோயில்படி!

B.நாகி ரெட்டி
நல்லாசியுடன்

சந்தாமாமா விஜயா
கம்பைன்ஸ்

ரஜினிகாந்த்

# உழைப்பாளி

P.வாசு

இளையராஜா M.C.சேகர் B.வெங்கட்ராமரெட்டி



# அம்புலிமாமா

## ஆகஸ்டு 1993

*

## பொருளடக்கம்



*


தனிப்பிரதி ரூ. 4-00.
வருட சந்தா ரூ. 48-00.

# இப்போது பிடிலைட் வழங்கும் வாட்டர் கலர்கள்

பிடிலைட் ®

# ஃபெவிக்ரில்



## பிக்ஸி பேக்

எளிதில் பரவும், மனதைக் கவரும்

A PIDILITE PRODUCT

# மங்கை

ஆகஸ்டு, 1993

★ திருக்கோகர்ணம்

(அருள்வலம்)

★ கம்ப்யூட்டரில்...

(பெண் தொழிலதிபர்)

★ மேனகை (சிறுகதை)

★ அமெரிக்க அனுபவம் (சிறுகதை)

★ பாஷன்

★ சமையற்கலைப் போட்டி

இதர வழக்கமான பகுதிகள்

விலை ரூ. 6/.

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி




## உயர்ந்த தொழில்தானே

இங்கிலாந்திலும் வேல்ஸிலும் ஜுன் 7ல் நடந்த 90 நிமிட ஆங்கில தேர்வில் 14 வயதுக்குட்பட்ட அறுபது லட்சம் பேர்கள் தேர்ச்சி பெற முடியவில்லை. இவர்களை ஆங்கிலம் எழுதவும் படிக்கவும் கோரப்பட்டது. அப்படிச் செய்ய முடியாது போனதற்குக் காரணம் மூன்று ஆசிரியர் சங்கங்கள் தேர்வைப் புறக்கணித்ததுதான். இது கவலைக் குரிய விஷயம்தானே!

இந்தத் தேர்வு இரண்டு ஆண்டுகளுக்கு முன் திட்ட மிடப்பட்டது. இதில் பங்கு பெறுவோர் தம் 16வது வயதில் 'பி' மட்டத் தேர்வுக்குத் தயாராவார்கள். அதன்பின் பல்கலைக் கழகங்களில் அவர்கள் சேர முடியும். எனவே இத்தேர்வில் தேர்ந்தவர்கள் 'ஏ' மட்டத் தேர்வில் கலந்து கொள்வார்கள். மற்றவர்கள் வெவ்வேறு தொழில் துறை களில் ஈடுபடுவார்கள்.

இந்தத் தேர்வில் சில குறைகள் இருப்பதாயும் இதனால் ஆசிரியர்களின் வேலைப்பளு அதிகமாகிறது எனக் கூறி ஆசிரியர்கள் வேலை நிறுத்தம் செய்து தேர்வை நடக்க விடாமல் செய்துவிட்டார்கள். இதற்கு பல பள்ளித் தலைமை ஆசிரியர்களும், பள்ளி நிர்வாகிகளும் சில பெற்றோர்களும் உடந்தையாம்!

பள்ளி மாணவர்களின் நலனில் வேலை நிறுத்தம் செய்த ஆசிரியர்களுக்கும் அவர்களை ஆதரித்தவர்களுக்கும் அக்கரை இல்லை என்பது தெளிவு. இது கண்டு பொது மக்கள் வருத்தமேபடுகிறார்கள். ஆசிரியத் தொழில் மிக உயர்வானது என்று தொண்டை கிழியக் கத்துகிறதைக் கேட்கிறோம். ஆனால் இப்படி எல்லாம் வேலை நிறுத்தம் நடப்பது கண்டு கண்ணீர் விட்டு வருத்தப்படவே வேண்டி யுள்ளது!

மதிமுகம்: 93 ஆகஸ்டு 1993 புன்னகை: 2

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



# மாட்டித் தவிக்காதே

அயலார்கள் பூமிக்கு வந்து இறங்கியுள்ளனர். அவர்கள் உங்களை எப்படியாவது பிடித்திட சதி செய்கிறார்கள். உங்களுக்குப் பல தடங்கல்கள், கொள்ளைக் காரர்கள், உடைந்த பாலங்கள், சாலைகள் மறித்தல் என மூலைக்கு மூலை தொந்தரவு. உங்களிடமுள்ளதெல்லாம் விரைந்து செல்லும் ஹாட் வீல்ஸ் 'பெஃர்ரி' (இன்னும் உங்கள் பென்சில்). மேலும் ஒரு சாலை உங்களைப் பாதுகாப்பாய் கொண்டு செல்லும். புறப்படுங்கள், நன்கு ஓட்டிச் செல்ல எங்கள் வாழ்த்துக்கள்.

ஃபெராரி

மரம் வீழ்ந்திருக்கிறது
வேறு வழியில் செல்க

முனிசிபாலிடி
வாகனம்

பாலம்
உடைந்துள்ளது!
வழியில்லை

டபிள்
டெக்கர்

டாட்ஸன்
200 S X
மாருதி 800
மோதல்

ஜீப் வழி அடைத்து நிறுத்தப்பட்டுள்ளது

ஜாக்கிரதை...
கொள்ளைக்காரர்கள்.

HTA-1077-94

இப்பக்கத்தைக் கத்தரித்து, உங்கள் பெயர், வயது, பள்ளியின் பெயர் எழுதி, அத்துடன் உங்கள் முகவரியுடன் கூடிய, தபால் தலை ஒட்டப்பட்ட ஒரு கவரையும் சேர்த்து அனுப்ப வேண்டிய முகவரி: தி கிரேட் எஸ்கேப் கேம், ப்ளோ ப்ளாஸ்ட் லிட். (டாய்ஸ் டிவிஷன்), லியோ ஹவுஸ், 88 C ஓல்டு பிரபாதேவி ரோடு, பம்பாய்-400 025 சரியான எல்லா நுழைவுகளும் பெற்றிடும் ஒரு விரைந்து செல்லும் ஹாட் வீல்ஸ் போஸ்டர்!



# 52ஆவது ஆப்பிரிக்க நாடு




ஐக்கிய நாடுகள் சபையில் மே 28ந்தேதி 182ஆவது உறுப்பு நாடாக சேர்த்துக் கொள்ள எரிட்ரியா அனுமதிக்கப்பட்டது. அதற்கு நான்கு நாட்களுக்கு முன் அதாவது மே 23ந்தேதி அது சுதந்திர நாடாகப் பிரகடனப் படுத்தப்பட்டு அதன் தலைநகர் ஆஸ்ஸிராவில் மக்கள் விழாக் களைக் கொண்டாடினர்.

இதற்கு முன் எதியோபியா வின் வடபகுதியாக எரிட்ரியா இருந்து வந்தது. இதன் வர லாறு மிகப் பழமையானது. அது 7ஆவது நூற்றாண்டு வரை எதியோபியாவிற்குள் அடங்கியே இருந்தது. 16ஆவது நூற்றாண்டில் அது துருக்கி நாட்டவரின் வசமாயிற்று. 1889ல் அது இத்தாலியின் ஆட்சியின் கீழ் வந்தது.

இத்தாலிய சர்வாதிகாரி முசலோனி 1936ல் எதியோப்பியாவை ஆக்கிர மித்துக் கைப்பற்றினான். இதற்கு படைத்தளமாக எரிட்சியாவைத்தான் உப யோகித்தான். நாட்டை இழந்த எதியோபிய மன்னர் ஹெய்லி சேலாஸி இங்கிலாந்தில் தஞ்சம் புகுந்தார். இரண்டாவது உலகப் போர் ஆரம்ப மாகியது. நேச நாடுகள் எதியோபியாவைக் கைப்பற்றி அதன் சக்கரவர்த்தி செலாலியிடம் ஒப்படைத்தது. 1941ல் எரிட்ரியா எதியோபியாவினுள் அடங்கிய நாடாயிற்று.

இதற்குப்பின் அங்கு சண்டைச் சச்சரவுகள், கலகங்கள் என மூண்டன.

1974ல் ராணுவ புரட்சி ஏற்பட்டு சக்கரவர்த்தி பதவி நீக்கம் செய்யப்பட்ட பின் உள்நாட்டு கலகங்கள் தீவிரமாயின. நாடு சுதந்திரப் போரைத் தொடங்கிய கொரில்லாக்களிடம் இருந்தது. விடுதலை கொரில்லாக்களுக்கும் எதியோபிய ராணுவத்திற்குமிடையே 30 ஆண்டுகளாக போர் நடந்து கொண்டே இருந்தது.

முடிவில் எரிட்ரியாவின் தலைநகர் ஆஸ்ஸரா எரிட்ரியன் மக்கள் விடுதலை முன்னணியின் கையில் 1991 மே 24ம்தேதி சிக்கியது. அப்போதே எரிட்ரியா சுதந்திர நாடான போதிலும் முழு சுதந்திரம் பெற்ற நாடாகப் பிரகடனம் செய்ய இரண்டு ஆண்டுகள் பிடித்தன. ஏப்ரல் 23-25ல் நடந்த வாக்கெடுப்பில் 99.8 சதம் எதியோபியாவிலிருந்து பிரிந்து இருக்கவே வாக்களித்தனர். அதற்குப்பின் தேசீய அசெம்பிளி கூடி இஸ்ஸாயயஸ் அபே வொர்க்கியை தலைவராகத் தேர்ந்தெடுத்தது.

தேசீய அசெம்பிளி 134 உறுப்பினர்களைக் கொண்டது. இது நான்கு ஆண்டுகள் ஆட்சி புரியும். அது தன் அரசியல் நிர்ணய சட்டத்தை உருவாக்கும். எரிட்ரியாவின் மக்கள் தொகை 35 லட்சம். இவர்களில் கிருஸ்துவர்களும் முஸ்லிம்களும் சமமாக இருக்கிறார்கள். ஆயினும் கிருஸ்துவர்களின் கை ஓங்கி உள்ளது.

எரிட்ரியா சுதந்திரம் பெற்றுவிட்டது. அங்குள்ள மக்கள் இனி நலமாக வாழ வேண்டும். சண்டை சச்சரவு இல்லாமல் ஒற்றுமையாக வாழ வேண்டும். அப்போதுதான் நாடு முன்னேற முடியும். இதற்காக அந்நாட்டுத் தலைர்கள் பாடுபட்டாக வேண்டும்.

தலைவர் அமே வொர்க்கி தம் நாட்டின் முன்னேற்றத்திற்கு உலகத்து நாடுகள் உதவ வேண்டும் என வேண்டுகோள் விடுத்திருக்கிறார். இந்த வேண்டுகோளுக்கு உலக நாடுகள் செவிசாய்த்து எரிட்யாவின் முன்னேற்றத்திற்கு எல்லாவிதத்திலும் உதவ வேண்டும்.

உள்நாட்டுப் போரை துணிச்சலுடன் நடத்திய 23 வயதான சாத்மகும்மறு மே 23ந்தேதி எரிட்ரியாவின் புதிய தேசியக் கொடியை ஏற்றி வைத்தார். சாதாரண காக்கிச்சட்டை, ப்ளாஸ்டிக் செருப்பு, தொப்பி இவற்றை அணிந்து வரும் இந்த இளைஞர் இந்த நல்ல நேரத்தைக் காணவே எட்டு ஆண்டுகள் தொடர்ந்து போராடினேன். இதற்குப் பெருமைப்படுகிறேன்'' என்றார்.



# பரிசின் மதிப்பு

பாறையூரில் பரமானந்தம் என்பவன் இருந்தான். அவன் மிகவும் நல்லவன். எல்லோருக்கும் உதவுபவன். ஆனால் அவன் காமாட்சியைக் கல்யாணம் செய்து கொண்டபின் இந்த நல்ல குணங்களை எல்லாம் விட்டுவிட வேண்டியதாயிற்று. ஏனெனில் காமாட்சி நாலு பேருடன் கலந்து பழகாமலும் யாருக்கும் எதுவும் கொடுக்க மனம் இல்லாமலும் எதிலும் கஞ்சத்தனத்தைக் காட்டுபவளாகவும் இருந்தாள். ஆனாலும் பரமானந்தம் அவளை மாற்றி நல்லவழிக்கு கொண்டு வருவது என்ற தீர்மானித்துக் கொண்டான்.

இப்படி இருக்கையில் அந்த ஊருக்கு பரமானந்தனின் நண்பன் சோமு பட்டணத்திலிருந்து வந்தான். அவன் பரமானந்தனிடம் "நான் அடுத்த ஊரில் ஒரு வேலையாக வந்தேன். நீ இங்கே இருப்பதால் ஒரு வாரம் இங்கேயே தங்கி அந்த வேலையை முடித்துக் கொண்டு போகலாம் என்று தீர்மானித்துவிட்டேன்" என்றான். பரமானந்தனும் "ஆகா! அப்படியே செய்" என்று மகிழ்ச்சியுடன் கூறினான்.

சோமுவும் பரமானந்தனும் தம் கடந்த நாட்களில் அனுபவங்கள் பற்றி பேசி மகிழ்ந்தனர். சோமு பல தடவைகளில் பரமானந்தனின் உதவி பெற்றவன். அவன் தன் உழைப்பால் முன்னேறி பட்டணத்தில் கோடீஸ்வரனாக ஆகிவிட்டான்.

காமாட்சிக்குத் தன் வீட்டில் சோமு வந்து தங்கியது பிடிக்கவில்லை. பெரும் பணக்காரனான அவன் ஏதாவது ஒரு உணவு விடுதியில் தங்கிச் சாப்பிடாமல்

—எஸ். சோபினி—



அங்கு வந்து தங்குவது பணத்தை மிச்சப்படுத்தத்தான் என்று எண்ணினாள். அதனால் அவள் தினமும் செய்வதைக் கூடச் செய்யாமல் வெறும் சாதமும் குழம்பும் மட்டும் வைத்து மோரிலும் நிறையத் தண்ணீர்விட்டு பரிமாறலானாள்.

இதைச் சோமு பொருட்படுத்தவில்லை. மேலும் அவன் காமாட்சியிடம் "நான் என் நண்பனைப் பார்க்க வந்து இங்கேயே தங்கி உங்களுக்கெல்லாம் சிரமம் கொடுத்துக் கொண்டிருக்கிறேன். நீ போட்ட சுவையான சாப்பாட்டை என்னால் மறக்கவே முடியாது. உன் சமையல் என் நண்பனின் பேச்சைவிட சுவையாக இருக்கிறது. என் நண்பனுக்கு அளிக்க ஒரு பரிசும் கொண்டு வந்தேன். அதைப் பெறும் தகுதி என் நண்பனைவிட உனக்குத்தான் உள்ளது" என்றும் கூறி விலையுயர்ந்த ஒரு வைர மோதிரத்தை எடுத்து அவளிடம் கொடுத்தான்.

அந்த மோதிரம் எந்த விரலுக்கும் பொருந்தும்படி சிறிது பெரிதாகும் விதத்தில் செய்யப்பட்டிருந்தது. அந்த மோதிரத்தைக் கண்ட காமாட்சி பிரமித்துப் போனாள். அவள் அதனை வாங்கிக் கொண்டதும் சோமு "பட்டணத்தில் பார்க்க வேண்டிய இடங்கள் எவ்வளவோ உள்ளன. நீயும் பரமானந்தமும் என் வீட்டிற்கு வந்து தங்கி இருந்து எல்லாவற்றையும் பார்த்துவிட்டு ஊர் திரும்பலாம்" என்று கூறி பரமானந்தத்திடமும் அவளிடமும் விடைபெற்றுக் கொண்டு பட்டணத்திற்குச் சென்றான்.

சோமு சென்றதும் பரமானந்தன் தன் மனைவியிடம் "பார்த்தாயா என் நண்பனின் உதார குணத்தை! உனக்கு எப்படிப் பட்ட பரிசை அளித்திருக்கிறான். நீ என்னவோ அவனுக்குச் சரியாகச் சாப்பாடு கூடப் போடவில்லை" என்றான்.

அதுகேட்டு காமாட்சி "உங்கள் நண்பர் கொடுத்த பரிசு ஒன்

றும் பிரமாதம் இல்லை. அவர் ஒரு வாரம் ஏதாவது ஒரு உணவு விடுதியில் தங்கிச் சாப்பிட்டுப் போயிருந்தால் இந்த மோதிரத்தின் விலையைவிட அதிகப் பணமே கொடுத்திருக்க வேண்டியிருக்கும். அவர் நம் வீட்டில் தங்கியதால் அவருக்குப் பணம் மிச்சம்'' என்றாள் முகத்தைச் சுளித்தவாறே.

ஒரு சில நாட்கள் கழிந்தன. காமாட்சிக்குத் திடீரென ஒரு விசித்திர நோய் கண்டது. அவளுக்கு சிகிச்சை அளித்த வைத்தியர் "நான் இப்போதைக்கு மருந்து கொடுத்துத் தடுத்து நிறுத்தி விட்டேன். ஆனால் இது மறுபடியும் எப்போது வேண்டுமானாலும் வரலாம். இதனை மறுபடியும் வராமல் நிரந்தரமாகத் தடுத்து நிறுத்தக் கூடிய வைத்தியர் பட்டணத்திலுள்ள பசுபதியே. உடனே இவளை அழைத்துக் கொண்டு போய் அவரிடம் காட்டி சிகிச்சை பெறச் செய்'' என்று பரமானந்தத்திடம் கூறினார்.

பரமானந்தமும் "ரொம்ப சரி. நாம் பட்டணத்தில் சோமுவின் வீட்டில் தங்கி அங்கே இருந்தபடியே வைத்தியரைப் பார்த்து சிகிச்சை பெறலாம்'' என்றான். காமாட்சியோ "அதெல்லாம் வேண்டாம். ஏதாவது ஒரு வாடகை விடுதியில் தங்குவோம்'' என்றாள்.



பரமானந்தம் என்ன செய்வான்? தன் மனைவியின் சொற்படியே பட்டணம்போய் அவளுடன் வாடகை விடுதி ஒன்றில் தன் மனைவியோடு தங்கினான். அவன் வைத்தியர் பசுபதியைப் பார்த்து காமாட்சியையும் காட்டினான். வைத்தியரும் மூன்று நாட்கள் அவளைப் பரிட்சித்துப் பார்த்து விட்டு "நோய் ஆரம்ப நிலையில் இருப்பதால் இதனை விரைவில் குணப்படுத்தி விடலாம். ஒரு மாதத்திற்கான மருந்தைக் கொடுக்கிறேன். அதைச் சாப்பிட்டு வந்தால் சரியாகிவிடும்'' என்று கூறினார்.

பரமானந்தனும் தன் மனைவி



யோடு ஊர்த் திரும்பி வந்தான். அப்போது அவன் மனைவி "நாம் வாடகை விடுதியில் தங்கியதால் நூறு ரூபாயே செலவாயிற்று. நாம் மட்டும் உங்கள் நண்பரின் வீட்டிற்குப் போய்த் தங்கி இருந்தால் பரிசு கொடுக்கவே ஐநூறு ரூபாய்க்கு மேல் செலவாகி இருக்கும்" என்றாள்.

பரமானந்தமோ "அந்த வைத்தியர் என் நண்பன் சோமுவை அறிவாராம். அவர் நாம் பட்டணத்திற்குச் சென்று சிகிச்சை பெற்றது பற்றி கண்டிப்பாக அவனிடம் கூறி இருப்பார். அதுகேட்டு அவன் மனம் என்ன பாடுபடும் தெரியுமா?" என்றான்.

காமாட்சியோ "அப்படி எல்லாம் இராது. நாம் அவர் வீட்டிற்குப் போகாததால் அவர் சந்தோஷப்பட்டிருப்பார்" என்றாள்.

பரமானந்தனும் "என் நண்பனைப் பற்றி எனக்குத்தான் தெரியும். அவன் செலவைப் பற்றி உன்னைப் போலக் கவலைப்பட மாட்டான். நண்பர்களுக்கு ஏதாவது பரிசுகளைக் கொடுத்துக் கொண்டிருப்பான்" என்றான்.

சில நாட்கள் கழிந்தன. பரமானந்தத்திற்கு சோமு அடுத்த ஊருக்கு வந்து ஒரு வாடகை விடுதியில் தங்கி இருப்பதாக தெரிந்தது. அவனைக் காண பரமானந்தம் கிளம்பியபோது அவன் மனைவி அவனைத் தடுத்து "உங்கள் நண்பர் இங்கே வந்தால் ஏதாவது பரிசளிக்க வேண்டுமே என பயந்து இந்த முறை இங்கே வரவில்லை பார்த்தீர்களா?" என்றாள்.

ஆனால் இரண்டு நாட்களுக்குப் பிறகு சோமு பரமானந்தத்தைக் காண அவர்களது வீட்டிற்கு வந்தான். அதுகண்டு காமாட்சி ஆச்சரியப்பட்டாள். சோமு தன் நண்பனிடம் "நீ பட்டணம் வந்தும் என் வீட்டிற்கு வராமல் போனது எனக்கு மிகவும் வருத்தத்தை அளிக்கிறது" என்று கூறிவிட்டு காமாட்சியிடம் "என்னம்மா! இவனுக்குத்தான் மூளை இல்லை

என்றால் நீயாவது எடுத்துச் சொல்லக் கூடாதா? நீங்கள் என் வீட்டிற்கு வரவில்லையே என்று நினைத்தே இந்தத் தடவை இங்கே வந்து தங்கவில்லை. ஆனால் மனம் கேட்கவில்லை. உங்களை எல்லாம் பார்த்துவிட்டுப் போகலாம் என்றே வந்தேன்'' என்றான்.

அப்போது காமாட்சி ''நான் வைத்தியம் செய்து கொள்ள வந்ததால் உங்கள் வீட்டிற்கு வரவில்லை. சாதாரண நிலையில் இருந்திருந்தால் வந்திருப்போம்'' என்று சொல்லி மழுப்பினாள். சோமுவோ ''இப்படியெல்லாம் மழுப்பி நழுவிவிட முடியாது. விரைவிலேயே நீங்கள் இருவரும் பட்டணத்திற்கு வந்து கொஞ்ச நாட்கள் தங்கி ஊரைச் சுற்றிப் பார்த்துவிட்டுப் போகவேண்டும். தெரிந்ததா?'' என்றான். பரமானந்தமும் காமாட்சியும் அப்படியே செய்வதாகக் கூறினார்கள்.

சோமு சிரித்துக் கொண்டே ''இப்போது உங்களோடு சண்டை போட நான் வரவில்லை. இந்தப் பக்கமாக வந்தேனே, இந்தப் பரிசைக் கொடுத்துவிட்டுப் போகலாம் என்றே வந்தேன்'' என்றான்.

அதுகேட்டு காமாட்சி மலைத்து நின்றாள். தான் சோமுவின் வீட்டிற்குப் போனால் பரிசு கொடுக்க வேண்டுமே என பயந்துதானே போகவில்லை என்பதை அவள் நினைத்துப் பார்த்துக் கொண்டாள். தன் வீட்டில் வந்து தங்காமல் போனாலும் பரிசளித்த சோமுவை அவள் மனம் பெரிதும் பாராட்டியது.

அப்போதுதான் உண்மை நட்பு என்ன என்பது காமாட்சிக்குப் புரிந்தது. அன்று முதல் அவளும் தன் கஞ்சத்தனத்தை விட்டுவிட்டு எல்லோருடனும் நன்கு பழகி தாராள மனத்துடன் இருக்கலானாள்.



# ஏன் ஓடினான்?

மருதமலைக் காட்டில் வேட்டையாடுபவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகமாகவே, அரசரின் அனுமதிப் பத்திரத்தைக் காட்டித்தான் அந்தக் காட்டில் வேட்டையாட முடியும் என்று உத்தரவு போடப்பட்டது. அனுமதி யின்றி வேட்டையாடினால் கடுமையாக தண்டிக்கப்படுவார்கள் என்றும் எச்சரிக்கப்பட்டது.

ஒருமுறை வேலனும் முருகனும் அந்தக் காட்டில் வேட்டையாடிக் கொண் டிருந்தனர். அப்போது காட்டின் அதிகாரிகள் வந்து அவர்களிடம் அனுமதிப் பத்திரத்தைக் காட்டும்படிக் கேட்டார்கள்.

அப்போது வேலன் அங்கிருந்து வேகமாக ஓடவே அதிகாரிகள் முருகனை எதுவும் கேட்காமல் வேலனைத் துரத்திக் கொண்டு ஓடினார்கள். வெகுதூரம் ஓடி மிகவும் சிரமப்பட்டு அவர்கள் வேலனைப் பிடித்து விட்டார்கள்.

தலைமை அதிகாரி "ஏய்? எங்களிடமிருந்து தப்பவா பார்த்தாய்? எங்கே அனுமதிப் பத்திரம்? எடு. பார்க்கலாம். உன்னிடம் அது இல்லாததால்தான் நீ ஓடி வந்தாய் என்பது எனக்குத் தெரியும்" என்றார். வேலன் நிதானமாக அரசரின் அனுமதிப் பத்திரத்தை எடுத்துக் காட்டினான்.

அதுகண்டு அதிகாரி திகைத்து "இது உன்னிடம் இருக்க, நீ ஏன் பயந்து ஓடினாய்?" என்று கேட்கவே வேலனும் "அனுமதிப் பத்திரம் என்னிடம் இருக்கிறது. ஆனால் என் நண்பன் முருகனிடம்தான் இல்லை" என்றான்.

அதிகாரியும் அவனது ஆட்களும் திகைத்து நின்றனர்.






# அதிசய மலர்

## 4

*[மாணிக்கபுரியின் தென் கடற்கரைப் பகுதியில் சில கிராமங்கள் தரைமட்டமாகி விடவே மக்கள் பயந்து அப்பகுதியிலிருந்து வெளியேறினார்கள். பலர் தலைநகருக்குள் வரவே அவர்கள் தங்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. கடற்கரைப் பகுதிக்குச் சென்று வந்த தளபதி நள்ளிரவில் கடலிலிருந்து கிளம்பி வரும் ஒரு ராட்சஸ உருவமே அவ்வாறு நாசப்படுத்துவதாக சேனாதிபதியிடம் கூறினான். அதன் பிறகு—]*

சேனாதிபதி கம்பீரசிம்மன் வேக வேகமாக அரண்மனைக்குப் போய் தளபதி வீரசிம்மன் கூறியவற்றை மன்னனிடம் தெரிவித்தான். மன்னனும் "என்ன சொல்கிறாய்? ஒரு ராட்சஸ மிருகமா இவ்வாறு செய்கிறது? இப்படிப்பட்ட மிருகம் பல லட்சம் வருடங்களுக்கு முன் இருந்து அழிந்தும் போனதாகப் படித்திருக்கிறோம். தளபதி அதைத் தன் கண்ணால் பார்க்கவில்லை. சில வீரர்கள் தாம் பார்த்ததாகக் கூறியதைத் தானே உன்னிடம் கூறினான். இது நம்பக் கூடியதாக இல்லை" என்றான்.

சேனாதிபதியும் "ஆமாம் தாங்கள் சொல்வதுபோல அவன் அந்த மிருகத்தைப் பார்க்கவில்லை தான். கிராமங்கள் தரைமட்ட



வதைக் கேட்டு நம்பாமல் நேரில் எதையும் விசாரித்து உண்மையை கண்டறிவதே சிறந்தது.

மன்னனும் "பேஷ். அவ்வாறே செய். திரும்பி வருவதற்குள் நம் ராஜ குருவையும் இது பற்றிக் கலந்து ஆலோசிக்கிறேன்" என்றான். சேனாதிபதியும் மன்னனிடம் விடைபெற்றுக் கொண்டு அகதிகள் தங்கி இருக்கும் இடங்களைப் பார்வையிடச் சென்றான்.

முதலில் பெண்களும் குழந்தைகளும் இருந்த பகுதிக்குச் சென்றான். அங்கு எளிய உடையில் இளவரசி பிரியம்வதை தன் தோழிகளோடு அகதிகளுக்கு உணவு பரிமாறிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவளும் "இங்குள்ளவர்களை எல்லாம் நாங்கள் நன்கு கவனித்து வருகிறோம். உணவு, உடை ஆகியவற்றைத் தாராளமாக அளித்து வருகிறோம். மருத்துவ வசதியும் செய்திருக்கிறோம்" என்றாள்.

சேனாதிபதியும் "இளவரசியே! நீங்கள் பெண்கள் குழந்தைகள் விஷயத்தில் அக்கரை எடுத்துக் கொண்டது பாராட்டத்தக்கது" என்றான். இளவரசியும் "இவர்கள் இந்த ஏற்பாடுகளால் மகிழ்ச்சி அடைந்தாலும் தம் கணவன்களையும் தந்தைகளையும் பார்க்க வேண்டும் என்று ஏங்குகிறார்கள். அதற்கு வழி செய்ய

மானதைத்தான் கண்டான். ஆனால் இப்படியாவதற்கு வேறு எந்தக் காரணமும் இல்லையே. எனவே ராட்சஸ மிருகம்தான் இந்தப் படுநாச விளைவிற்குக் காரணம் என முடிவுக்குத்தான் வரவேண்டும். நானே கடற்கரைக்குப் போய் அந்த ராட்சஸப் பிராணியைப் பார்ப்பது என்று தீர்மானித்து விட்டேன்." என்றான்.

சேனாதிபதி இவ்வாறு கூறியது கேட்டு மன்னன்சற்று யோசித்துப் பார்த்தான். ஆம் சேனாதிபதி எடுத்த முடிவு சரியே. உண்மையில் என்ன நடக்கிறது, அதற்கான காரணம் என்ன என்று கண்டறியத்தான் வேண்டும். பிறர் சொல்

வேண்டும்'' என்றாள்.

சேனாதிபதியும் "ஓ! இதை நாளையே செய்கிறேன்.'' எனக் கூறிவிட்டு மற்ற அகதிகள் முகாமைக் காணச் சென்றான். அப்போது வழியில் தளபதி வீரசிம்மன் அவனைக் கண்டு "இன்றும் சில வீரர்கள் காயமடைந்து திரும்பி வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு சிகிச்சை அளிக்க ஏற்பாடு செய்துவிட்டு வந்திருக்கிறேன். அவர்களும் ராட்சஸ மிருகத்தைக் கண்டு மிரண்டு போயிருக்கிறார்கள்'' என்றான்.

அதுகேட்டு சேனாதிபதி "அப்படியானால் ராட்சஸ மிருகத்தால் தான் தொல்லை என்பது உறுதியாகிறது. இதை எதிர்த்துப் போராட மற்றும் சிலரது உதவியை நாம் நாட வேண்டி வரலாம். முதலில் அந்த ராட்சஸ மிருகம் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும். எனவே நானே தென் கடற்கரைப் பகுதிக்குப் போய் அதைப் பார்க்கத் தீர்மானித்துவிட்டேன். நீயும் என்னுடன் வரவேண்டும். இன்று மாலை நீ புறப்படத் தயாராக இரு'' என்றான்.

வீரசிம்மனும் "அப்படியானால் ஒரு சிறு படையை நம்மோடு அழைத்துச் செல்லலாமா?'' என்று கேட்கவே சேனாதிபதியும் "வேண்டாம். நம்மோடு மூன்று வீரர்களை மட்டும் அழைத்துச் செல்வோம். இந்த விஷயம் யாருக்கும் தெரியக்கூடாது'' என்றான்.





அன்று மாலை சேனாதிபதியும் படைத் தளபதியும் மூன்று வீரர்களும் தம் குதிரைகளின் மீது அமர்ந்து தென் கடற்கரைப் பகுதிக்குச் சென்றார்கள். அங்கு பல கிராமங்கள் தரை மட்டமாகியுள்ளதை அவர்கள் கண்டார்கள். ஜனநடமாட்டமே இல்லாமல் இருக்கும் அங்கு அரசாங்க வீரர்கள் மட்டும் பாராக் கொடுத்துக் கொண்டிருப்பதை அவர்கள் கண்டார்கள்.

அவர்கள் கடற்கரையை அடைந்ததும் மணல் பரப்பில் ஏதாவது காலடிச் சுவடுகள் தென்படுகின்றனவா என்று பார்த்தார்கள். ஓரிடத்தில் ஏதோ ஒன்றை இழுத்துச் சென்றதற்கு அறிகுறியாகப் பட்டையான கோடு தென்பட்டது. அது கடலின் ஆரம்பத்திலிருந்து வட திசையை நோக்கி இருப்பதைக் கண்டு அது போன வழியே அவர்களும் சென்றார்கள். கொஞ்ச தூரம் சென்றதும் ஓரிடத்திலிருந்து இரண்டு பெரிய காலடிச் சுவடுகளை அவர்கள் கண்டார்கள். தளபதி அதனைச் சுட்டிக் காட்டி சேனாதிபதியிடம் "கடலிலிருந்து ஏதோ ஒரு பெரிய பிராணி வெளியே வந்து நடந்து போயிருக்கிறது என்று இவற்றைக் கொண்டு நாம் ஊகிக்கலாம்" என்று கூறினான்.

சேனாதிபதியும் "சரிதான்.. ஆனால் கடலினுள்ளிலிருந்து வந்த பிராணி மறுபடியும் கடலுக்குள்தானே போகும்? இந்தச் சுவடுகளோ வட திசையில்தானே சென்று கொண்டிருக்கின்றன" என்றான். தளபதியும் "ஆமாம். இது மறுபடியும் கடலை நோக்கிப் போகிறதா என்று பார்க்கிறேன்" என்று கூறி சுற்றிலும் பார்க்கலானான். ஆனால் அப்படி எதுவும் தெரியவில்லை.

நேரம் ஆக ஆக இருட்ட ஆரம்பித்தது. அதனால் எதுவும் தெளிவாகத் தெரியவில்லை. அன்றிரவு அவர்கள் காவல் புரியும் வீரர்கள் இருக்கும் இடத்திலிருந்து கொஞ்சம் தள்ளித் தங்கத் தீர்மானித்தார்கள். அவர்கள் இருந்தது

காவல் காப்பவர்களுக்குக் கூடத் தெரியவில்லை.

நள்ளிரவு ஆனது. பரந்த கடலும், விசாலமான வானமும் அதில் மின்னும் நட்சத்திரங்கள் மட்டுமே தென்பட்டன. விடியும் வேளை வரை அவர்கள் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருந்தார்கள். கிழக்கு வானம் வெளுக்கும்போது வடதிசையில் மலை போல கருத்த உருவம் ஒன்று நகர்வது அவர்களுக்குத் தெரிந்தது. அது மெதுவாக அவர்கள் இருக்கும் இடத்தை நோக்கி வரலாயிற்று.

வடதிசையிலிருந்து வரும் அந்த உருவத்தை சேனாதிபதி உற்றுப் பார்க்கலானன். தொலை தூரத்தில் அது சிறு கருப்பு பொம்மை போலத் தென்பட்டது. ஆனால் அது நகர்ந்து வரவே மிகப் பெரிதாகிக் கொண்டே போயிற்று. அதன் ஆரம்பம் எது என்று காணமுடியவில்லை. ஏனெனில் அதன் உச்சிப் பகுதி மிக உயரத்தில் இருந்தது.

சேனாதிபதி அதனை தளபதிக்குக்காட்டினான். அதன் தலை மிக உயரத்தில் இருந்ததால் அதன் முகத்தை அவர்களால் பார்க்க முடியவில்லை. ஆனால் அது நெருங்க நெருங்க அதன் பூதாகரமான உருவம் நன்கு தெரிந்தது. பனைமரம் போன்ற கால்கள்,



மலைப்பாம்பு போன்ற கைகள், பயங்கர உருவம். இப்படிப்பட்ட பிராணியைக் கண்டு சேனாதிபதியே பயந்துதான் போனான்.

சேனாதிபதியும் படைத் தளபதியும் அது வரும் வழியில் நில்லாமல் சட்டென ஒதுங்கி ஒரு பக்கம் பதுங்கினார்கள். அவர்களைப் போலவே மற்ற மூன்று வீரர்களும் சட்டென மறைந்து கொண்டார்கள். கிழக்கு திசையில் வெளிச்சம் அதிகமாகும் போது அந்த ராட்சஸ மிருகம் கடலுக்குள் இறங்கி மறைந்து போயிற்று.

சேனாதிபதியின் மனதில் அந்த ராட்சஸ மிருகத்தை எந்த மனிதனாலும் எதிர்க்க முடியாது



என்று தெளிவாகப்பட்டது. அது நடு ராத்திரியில் கடலிலிருந்து வெளியே வந்து வடதிசையில் சென்றுவிட்டு வந்து சூரியோதய வேளையில் மீண்டும் கடலுக்குள் போய் விடுகிறது என்பது தெரிந்து விட்டது. அதனை எதிர்க்க முடியாது என்று கண்டு கொண்ட சேனாதிபதி தன்னோடு வந்த மூன்று வீரர்களையும் தலைநகருக்குத் திருப்பி அனுப்பி விட்டான்.

முன்தினம் காவல் காக்க வந்த வீரர் படை போன இடம் தெரியவில்லை. அவர்கள் அந்த ராட்சஸ மிருகத்தின் கால்களின் கீழ் அழுந்தி தரைக்குள்தான் போயிருக்க வேண்டும். அப்போது வீரசிம்மன் "இந்த பயங்கர மிருகத்தை நம்மால் எதிர்க்க முடியாது போனாலும் இது நம்நாட்டில் அடி எடுத்து வைக்காமல் செய்துவிட வேண்டும். அப்போதுதான் நம்நாடு நாசமடையாமல் இருக்கும்" என்றான்.

சேனாதிபதியும் "ஆமாம். நீ சொல்வதுபோல அதனை நாட்டிலிருந்து விரட்டியே ஆகவேண்டும். அதற்கான வழியைக் காணலாம். நாம் தலைநகருக்குப் போவோம். மன்னரைக் காண்போம். அவரிடம் யாவற்றையும் விவரமாகக் கூறுவோம். இனிமேல் இப்பகுதியில் காவல்புரிய ஒரு வீரனைக் கூட அனுப்ப வேண்டாம். நாளை நீ மறுபடியும் இங்கு வந்து அந்த ராட்சஸ மிருகம் பற்றி மேலும் ஏதாவது தகவல் கிடைக்கிறதா என்று பார்" எனக் கூறிவிட்டுக் குதிரை மீது ஏறி அமர்ந்தான்.

தளபதியும் தன் குதிரை மீது ஏறி அமர்ந்தான். இருவரும் வேகமாகத் தலைநகருக்குச் சென்றார்கள். சேனாதிபதி அரண்மனையை அடைந்து மன்னனைக் காணச் சென்றபோது அவன் ராஜ குருவுடன் பேசிக் கொண்டிருந்தான். அவன் சேனாதிபதியைக் கண்டதும் "ராட்சஸ மிருகத்தைப் பார்த்தாயா?" என்று கேட்டான்.

சேனாதிபதியும் "பார்த்தேன். அந்த வீரர்கள் சொன்னது உண்

மையே. அது பயங்கர ராட்சஸ மிருகமே'' என்றான். பிறகு அவன் தான் தென் கடற்கரைக்குப் போன திலிருந்து ஆரம்பித்து ராட்சஸ மிருகம் சூரியோதய வேளை யின்போது கடலுக்குள் போனது வரை யாவற்றையும் விவரமாகக் கூறினான். "அது நடுராத்திரி யின்போதுதான் கடலிலிருந்து வெளியே திரும்பி வருகிறது. சூரியோதயம் ஆகும்போது அது கடலுக்குள் போய் மறைந்து விடு கிறது. இதை நானே நேரில் கண் டேன்'' என்றான் கம்பீரசிம்மன்.

இதைக்கேட்ட மன்னன் யோசனை யில் ஆழ்ந்தான். அப்போது ராஜ குரு "மகாராஜாவே! அர்ச்சகர் குலத்தின் சாபத்திற்கு ஆளான சந்திரகேது ராட்சஸ மிருகமாய் நம் நாட்டில் அலைந்து திரிகிறது என்றே நினைக்கிறேன். ஏனெ னில் நூறாண்டுகளுக்கு ஒருமுறை மலரும் அதிசய மலர் நம் நாட்டின் வடகிழக்குப் பகுதியில் உள்ளது. அந்த மலருக்காக சாபத்தால் ராட் சஸ மிருகமாக மாறிய சந்திர கேது நம் நாட்டிற்கு வந்து இப்படி செய்கிறான் போலும். எனவே அந்த அதிசய மலர்தான் இப் போது நம்மைக் காப்பாற்ற வேண் டும்'' என்றார்.

ராஜகுரு அவ்வாறு கூறியது கேட்டு மன்னன் ஆச்சரியப்பட் டான். ஏனெனில் இதே குருதான்



அதிசய மலர் அரண்மனையில் இருந்தால் நாட்டிற்கே ஆபத்து என்று கூறினார். இப்போதோ அதே மலரால்தான் நாடு காக்கப் படும் என்று கூறுகிறார். இது முன்பு சொன்னதற்கும் தற்போது சொல்வதற்கும் நேர் முரண் பாட்டையல்லவா காட்டுகிறது!

மன்னனும் "குருவே! தாங்கள் தாமே அந்த மலர் நம்மை அழித்து விடும் என்று கூறினீர்கள். இப் போதோ அதே மலர்தான் நம்மைக் காக்க வேண்டும் என்கிறீர்கள். இது ஒன்றுக்கொன்று முரணாக உள்ளதே'' எனக் கேட்டான்.

ராஜகுருவும் "சாபத்திற்குள் ளான சந்திரகேது தரைமீது இருக்க

இடம் கிடைக்காமல் கடலுக்குள் சென்றுவிட்டான். அதிசய மலர் தான் அவனைக் கவர்ந்து இருக்கிறது. அந்த மலரைக் கொண்டு வந்து கடலில் போட்டு விட்டால் நாம் அந்த ராட்சஸ மிருகத்திடமிருந்து தப்பலாம். இதைச் செய்ய வல்லவனைத் தேர்ந்தெடுத்த வேண்டும்'' என்றான்.

இதைக் கேட்டதும் மன்னனுக்கு சிங்காய் மலையிலுள்ள உத்தமனின் நினைவு வந்தது. அந்த மலைச் சாதியினர் தன்னை அப்பகுதிக்கு வருமாறு அழைத்திருந்ததையும் நினைவுபடுத்திக் கொண்டான். அதிசய மலரை இளவரசிக்குப் பரிசாக அளித்த உத்தமனையே இப்பணி செய்ய வைப்பது என தீர்மானித்துக் கொண்டான்.

அவன் சேனாதிபதியிடம் "நான் நாளை நம் நாட்டின் வடகிழக்கு பகுதிக்குப் போகவேண்டும். என்னுடன் படைத் தளபதி வீரசிம்மன் ஒருவன் மட்டும் வந்தால் போதும்'' எனக் கூறினான். பிறகு அவன் ராஜகுருவிடம் "என் பயணம் வெற்றிகரமாக நடைபெற ஆசீர் வதியுங்கள்'' என்று வேண்டினான்.

ராஜகுருவும் "நீ என்ன நினைக்கிறாய் என்பதை ஊகித்துவிட்டேன். உன் முடிவு சரியானதே. இப்பணியை நீ ஈடுபாடுடன் செய்யும் ஒருவனிடம் ஒப்படைக்கப் போகிறாய். அவனது சக்தியிலும் திறமையிலும் எள்ளளவும் சந்தேகிக்கவும் முடியாது. எனவே நீ எண்ணியபடியே எல்லாம் நடக்கும்'' என்றார்.

மன்னனும் அவரை வணங்கி நின்றான்.

ராஜகுருவும்" உன் முடிவு சரியே. சிங்காய் மலைச் சாதியினர் நாட்டுப் பற்று மிகுந்தவர்கள். அவர்களது உதவியாலும் அம்பிகையின் அருளாலும் நீ உன் முயற்சியில் வெற்றி அடைவாயாக'' என்று ஆசி கூறினார்.

(தொடரும்)






## ஆசையா கொண்டான்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர இரவில் இந்த வேலையை நீ மேற்கொண்டது ஏதோ ஒரு ஆசையால் தானே. ஆசை அழிவைத் தரும். இதுபற்றி விளக்க பலதேவன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள். உனக்கும் வழியில் சிரமம் தெரியாது இருக்கும்" எனக்கூறி கதை சொல்ல ஆரம்பித்தது.

விஜயபுரியின் மன்னன் விக்கிரமசேனன். அவனுக்கு ஜெயதேவன், பலதேவன் என்ற இரு புதல்வர்கள் இருந்தனர். ஜெயதேவ

வேதாளம் சொல்லும் கதை



னுக்கு ஆரம்ப முதல் வேதாந்த விஷயங்களைப் படிப்பதில் மிகுந்த ஈடுபாடு உண்டு. பலதேவனோ ஆட்சி தனதாக வேண்டும் என எண்ணி வந்தான்.

ஜெயதேவன் வேதாந்த விஷயங்களோடு போர்க்கலை, ஆட்சி முறை, பொருளியல் ஆகியவற்றையும் நன்கு கற்றான். விக்கிரம சேனன் தன் மூத்த மகனான ஜெயதேவனுக்கு இளவரசுப் பட்டம் கட்ட விரும்பினான். ஆனால் பலதேவன் அதனை ஆட்சேபித்து "ஜெயதேவன் என்னைவிடப் பெரியவனானாலும் நாட்டை ஆளத் தெரியாதவன். வறட்டு வேதாந்தம் பேசுவான். எனவே எனக்குத் தான் இளவரசுப் பட்டம்" என்று வற்புறுத்தினான்.

அப்போது அங்கிருந்த ஜெயதேவன் "ஜனக மகாராஜாவும் வேதாந்திதான். ஆனால் நாட்டை நன்கு ஆளவில்லையா?" என்று கேட்டான். அப்போது பலதேவன் "வேதாந்திக்கு ஆசை கூடாது. ஆனால் நீயோ இளவரசனாக ஆசைப்படுகிறாயே" என்றான் பதிலுக்கு.

அதுகேட்டு ஜெயதேவன் சிரித்து "நான் என்னை வேதாந்தி என்று கூறிக் கொள்ளவில்லையே. மேலும் தந்தைதான் என்னை இளவரசனாக்க எண்ணி இருக்கிறார்" என்றான். அப்போது விக்கிரம சேனன் பலதேவனின் முதுகில் வாஞ்சையுடன் தட்டி "மகனே! நீங்கள் இருவரும் இராம லட்சுமணர்கள் போல அன்னியோன்னியமாக இருக்க வேண்டும் என நான் விரும்புகிறேன். நாடாளும் ஆசையை விட்டுவிடு. மூத்த மகனுக்குப் பட்டம் கட்டுவதே முறை. வழக்கமும்கூட" என்றான்.

ஜெயதேவனும் "தம்பீ! எனக்கு நாடாளும் ஆசை இல்லை. அதற்காக நான் வேதாந்தி எனவும் இல்லை. மூத்த மகனுக்குத் தான் பட்டம் என்பது விதி. அது தான் தொன்று தொட்டுப் பழக்கத்தில் இருந்து வரும் முறை. எனவே நம் தந்தை கூறுவதைக்

கேட்டு நட'' என்றான்.

பலதேவனோ ''முறை, வழக்கம் என்றெல்லாம் சொல்லாமல் பதவியைத் தகுதியைப் பொறுத்தே அளிக்க வேண்டும்'' என்றான். அப்போது ஜெயதேவன் ''நல்ல வேளை. தகுதி வேண்டும் என்பதை யாவது ஒப்புக்கொள்கிறாயே. அப்படியானால் என்னுடன் போட்டி போட்டு உனக்குத் தகுதி உள்ளது என்று நிரூபி. அதில் நீ வென்றால் இளவரசனாகலாம்'' என்றான்.

பலதேவனுக்கு உடனடியாகச் சொல்ல எந்த பதிலும் தோன்ற வில்லை., அப்போது ஜெயதேவன் அவன் முதுகில் தட்டி ''அதற்குத்தான் எல்லாமே கற்க வேண்டும் என்பது. வேதாந்தமும் கூடத் தான்'' என்று சிரித்துக்கொண்டே கூறினான். பலதேவனும் ''அப்டியா! இன்னும் இரண்டு வருடங்களுக்குள் நான் எல்லாவற்றையும் கற்றுக் கொண்டு வருகிறேன். அப்போது போட்டியை வைத்துக் கொள்ளலாம்'' என்றான். ஜெயதேவனும் அதற்கு சம்மதித்தான்.

இரண்டு வருட காலம் விடாமல் முயற்சி செய்து பலதேவன் போர்க்கலைகளை நன்கு கற்றான். அதன் பிறகு அவன் ஜெயதேவனிடம் தான் போட்டிக்குத் தயார் என்றான். போட்டியும் நடந்தது. வாட்போர், மற்போர் ஆகியவற்றில் ஜெயதேவனே வெற்றி



பெற்றான். பலதேவன் தோற்றுப் போனான்.

இதைக் கண்டு பலதேவன் ''போர்க்கலையில் இவ்வளவு திறமை பெற்றும் வேதாந்தியாக விளங்குகிறாயே. இதனால் நீ நாடாள ஆசை கொண்டிருக்கிறாய் என்பதுதானே தெரிகிறது'' என்றான். ஜெயதேவனோ ''அரசனாக எல்லாவற்றையும் நன்கு தெரிந்து வைத்திருக்க வேண்டும். அதில் வேதாந்தமும் உள்ளடங்கியதுதான்'' என்றான் சிரித்துக் கொண்டே.

பலதேவனுக்கு ஜெயதேவன் கூறியது பிடிக்கவில்லை. ஜெயதேவன் வெறும் வேதாந்தி மட்டும்



அல்ல போர்க் கலைகளிலும் திறமை பெற்றவன் என நிரூபித்து விட்டான். அதனால் தகுதி திறமை என்பதிலும் தன்னால் ஜெய தேவனை மிஞ்ச முடியவில்லை என்பது கண்டு அவன் மனம் பொருமிக் கொண்டிருந்தான்.

விக்கிரமசேனன் தனக்குப் பிறகு ஜெயதேவனே மன்னன் என அறி விக்க நினைத்தான். ஆனால் பல தேவன் அதனை ஆட்சேபித்தான். ஆனால் மன்னன் அதைப் பொருட் படுத்தவில்லை. அப்போது அவன் தன் தாயாரிடம் போய் "அம்மா! நான்தான் இந்நாட்டின் மன்ன னாக வேண்டும். அப்படி நடக்கா விட்டால் கலகம் செய்து ராஜ துரோகி ஆகிவிடுவேன். அண் ணன் வேதாந்தி. அவனுக்கு நாடு எதற்கு? அப்பாவிடம் இதை நீ எடுத்துச் சொல்" என்றான்.

அவனது தாயாரும் "மூத்தவனுக் குத்தான் பட்டத்திற்கு உரிமை. நீ ராஜதுரோகி ஆகாதே. உனக்கு அதனால் மரண தண்டனைதான் கிடைக்கும். நீ உன் அண்ண னோடு அன்புடன் ,இரு" என் றாள். ஆனால் ப்லதேவனோ பிடிவாதமாக "அதெல்லாம் முடி யாது. எனக்குப் பல படை தளபதி கள் உதவுவதாகக் கூறி இருக்கி றார்கள். நண்பர்கள் வேறு பக்க பலமாக இருக்கிறார்கள். நான் கலகம் செய்து ஆட்சியைக் கைப் பற்றிக் கொள்வேன். அண்ணன் நாட்டிற்கு ஓடிப் போய் விடு வான்" என்றான்.

ராணி பயந்துபோய் மன்னனுக் குத் தகவல் கொடுத்தாள். அது கேட்டு கோபம் கொண்டு விக்கிர சேனன் தன் இரு புதல்வர்களை யும் அழைத்து வரச் சொன்னான். அவர்கள் வந்ததும் அவன் பலதேவ னைக் கண்டபடி திட்டி அவனை தண்டிக்கப் போவதாகக் கூறி னான்.

அப்போது ஜெயதேவன் "தந் தையே, கோபப்பட வேண்டாம். நான் பலதேவனின் நடவடிக்கை களை எல்லாம் கண்காணித்தே வந்திருக்கிறேன். அவனுக்கு உதவு

வதாகக் கூறியவர்கள் எல்லாம் என்னைச் சந்தித்து தாங்கள் இவனுக்கு உதவுவதாகச் சொன்னது மேலுக்குத்தான் என்று விளக்கினார்கள். அவர்கள் எல்லோரும் நான்தான் அரசனாக வேண்டும் என்றும் விரும்புகிறார்கள். எனவே நீங்கள் பலதேவனை மன்னித்து விடுங்கள்'' என்றான்.

பலதேவன் அதுகேட்டுத் திகைத்துப் போனான். ஜெயதேவன் தன் நடவடிக்கைகளை எல்லாம் கண்காணித்துத் தன் திட்டங்களை எல்லாம் அறிந்து அவை பயனற்றுப் போகும்படி செய்துவிட்டான். உண்மையிலேயே ஜெயதேவன் சாமர்த்தியசாலிதான்.



விக்கிரமசேனனோ ''இவன் மனதில் கலகம் செய்ய வேண்டும் என்று தோன்றிவிட்டது. இப்போது விட்டுவிட்டாலும் பின்னால் இவனால் அபாயம் ஏற்படும்'' என்றான். ஜெயதேவனோ ''இவனை ஒரு வருட காலத்திற்கு ஆட்சிபுரிய விடுங்கள். மக்கள் இவனது ஆட்சியை விரும்பினால் இவனே தொடர்ந்து ஆட்சிபுரியட்டும். எனக்கு நாடாள வேண்டும் என்ற ஆசை இல்லை. காட்டில் போய் நிம்மதியாகத் தவம் செய்து காலம் கழிக்கவும் நான் தயார்'' என்றான்.

மன்னன் இதற்கு ஒப்புக் கொண்டு பலதேவனிடம் ஓராண்டு காலத்திற்கு ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தான். பலதேவனும் அந்த ஓராண்டு காலம் நல்லவிதமாகவே ஆட்சி புரிந்தான். ஜெயதேவன் ஒருநாள் சபையைக் கூட்டி ''பலதேவன் நன்கு ஆட்சி புரிந்ததால் இனியும் அவனது ஆட்சியே நீடிக்கட்டும். நான் காட்டிற்கு போய் தவம் செய்து காலம் கழிக்கிறேன்'' என்றான். சபையோர்கள் அதை ஏற்காமல் ஜெயதேவன் தான் மன்னனாகி ஆட்சிப் பொறுப்பை ஏற்க வேண்டும் என்று ஒருமனதாகக் கூறினார்கள். அது கேட்டு பலதேவன் திடுக்கிட்டான்.

அப்போது ஜெயதேவன் எல்லோரிடமும் ''கவலைப்படாதீர்கள். இந்



நாட்டின் மன்னனாக நானே ஆகி றேன். என் பிரதிநிதியாக பலதே வன் ஆட்சி புரியட்டும். நான் காட்டில் போய் வசிப்பேன். அங்கு நம்நாடு நலம் பெற வேண்டு மென்று தவம் புரிவேன். பலதே வன் ஆட்சியில் ஏதாவது குற்றம் குறைகளைக் கண்டால் யார் வேண்டுமானாலும் வந்து சொல்ல லாம்" என்று தன் முடிவைக் கூறினான்.

பலதேவன் ஆட்சி புரியலா னான். ஆனாலும் அவன் திருப்தி அடையவில்லை. மக்கள் அவனை ஜெயதேவனின் பிரதிநிதி என்று தான் கூறினார்களேயொழிய மன் னன் எனக் கூறவில்லை. ஜெய தேவனையோ நாட்டைக் காக்கும் தெய்வம் எனக் கூறி மரியாதை செய்தனர். அவனது தவவலிமை யும் அதிகரித்தது. இதெல்லாம் தனக்கு ஆபத்தை விளைவிப் பவை என்று பலதேவன் கருதி னான்.

அவன் ஜெயதேவனைக் கொல்ல சிறைச்சாலையில் கொலைக் குற் றத்திற்காக தண்டனை அனுப வித்து வரும் சில கைதிகளை விடுதலை செய்து அனுப்பினான். அவர்கள் ஜெயதேவனின் தவவலி மையைக் கண்டும் அவனது அறிவுரைகளைக் கேட்டும் அவ னது சீடர்களாகிவிட்டார்கள். அது கண்டு ஜெயதேவனின் மனதைக் கவர்ந்து தவத்தைக் கலைக்க சில அழகிய பெண்களை பலதேவன் அனுப்பினான். ஜெயதேவன் அவர் களுக்கு அறிவுரைகள் கூறி அவர் களைத் தன் சீடர்களுக்கு மணம் செய்து வைத்தான்.

ஜெயதேவனைத் தன்னால் ஒன் றுமே செய்ய முடியாது என்று பலதேவனுக்கு விளங்கிவிட்டது. மக்களும் தன்னை ஜெயதேவனை விடக் குறைவாகவே மதிப்பிடு கிறார்கள் எனக்கண்டு அவன் தானே அந்நாட்டு மன்னன் என் றும் தான் ஜெயதேவனின் பிரதி நிதி அல்ல என்றும் பறைசாற்று வித்தான்.

இதற்குச் சில மந்திரிகளும்

அரசாங்க அதிகாரிகளும் பிரமுகர் களும் ஆட்சேபித்து எதிர்ப்புத் தெரிவித்தார்கள். அவர்களை எல்லாம் பலதேவன் நாடு கடத்தி னான். அவர்கள் காட்டிலுள்ள ஜெயதேவனிடம் போய் முறை யிடவே அவனும் நீங்கள் என் னோடு இங்கேயே இருந்து விடுங்கள்'' என்றான்.

பலதேவனின் ஆட்சி கொடிய தாக மாறிக்கொண்டே போயிற்று. அதனால் காட்டிற்கு வந்து ஜெய தேவனோடு இருக்க வருவோர் எண்ணிக்கை பெருகியது. எல் லோரையும் ஜெயதேவன் தன்னு டன் இருக்கச் சொன்னான். அவர் களது தேவைகளை எல்லாம் பூர்த்தி செய்ய தன் தவவலிமை யால் கற்பக மரம் போன்ற ஒரு மரத்தைச் சிருஷ்டி செய்தான்.

ஒருநாள் சில வீரர்களோடு பலதேவன் காட்டிற்குப்போய் ஜெய தேவனைப் பார்த்து "நீ இங்கு குற்றவாளிகளுக்கு இடம் கொடுத்து ராஜதுரோகம் செய்துவிட்டாய். அதற்காக உன்னை தண்டிக்கப் போகிறேன்'' என்றான்.

ஜெயதேவனோ "நான் இன்ன மும் இந்நாட்டின் மன்னன். நீ என் பிரதிநிதி. நீ யார் என்னைத் தண் டிக்க?'' என்று கோபத்தோடு கேட்டான். அதனால் ஆத்திரம் அடைந்து பலதேவன் தன் வீரர் களிடம் அங்குள்ளவர்களை எல் லாம் கைது செய்யும்படிக் கட் டளை இட்டான்.



ஜெயதேவன் தான் சிருஷ்டித்த மரத்தை நோக்கி சைகை செய் தான். அதன் கிளைகளிலிருந்து நூற்றுக்கணக்கான வீரர்கள் குதித்து பலதேவனையும் அவனது வீரர் களையும் கைது செய்தனர். அப் போது ஜெயதேவன் "இந்த பல தேவன் தேசத் துரோகி. அவனை நாடு கடத்துங்கள்" என்று கட் டளை இட்டான். அதன் பிறகு அவன் தலைநகரத்திற்குப் போய் பட்டாபிஷேகம் செய்து கொண்டு ஆட்சி புரியலானான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி "மன்னனே! வேதாந்தியான ஜெயதேவன் மனதில் நாடாளும் ஆசையே இருக்கவில்லையா? அவன் பலமுறைகளிலும் பலதேவனின் முறையற்ற போக்குகளைச் சகித் துக் கொண்டாலும் முடிவில் அவனை நாடு கடத்திவிட்டுத் தானே மன்னனாக பட்டாபிஷேகம் செய்து கொண்டானே. இது சரியா? இக் கேள்விகளுக்கு விடை தெரிந் திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "ஜெயதேவன் தனக்கு நாட்டை ஆள வேண்டும் என்ற ஆசை இல்லை என்பதை பலதேவனைத் தன் பிரதிநிதியாக நியமித்து அவனிடமே ஆட்சியை ஒப்படைத்ததன் வாயிலாகக் காட்டி விட்டான். பலதேவனின் போக்கு மக்களுக்கு எதிராகப் போனதா லும், அவன் தானே மன்னன் எனக் கூறி ஜெயதேவனையே கைது செய்யப் போனதாலும் நாட்டின் நலனுக்காக ஜெயதேவன் அவ னைக் கைது செய்து தண்டிக்க வேண்டியதாயிற்று.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உட லோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா அனுபந்தம்—57

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## பருந்துகள்

உலக விளையாட்டுப் போட்டி களை ஆரம்பிக்கு முன் அமைதிச் சின்னமாகப் புறாக்களை பறக்க விடு கிறார்கள். பழங்காலத்தில் புறாக் களின் கால்களில் கடிதங்களைக் கட்டி செய்திகளை அறிவித்தும் வந்தார்கள். கிளிகளுக்குப் பேச்சு சொல்லிக் கொடுத்தும் அவற்றை யும் அனுப்பினார்கள். அதுபோல பறவைகளை வேட்டையாடப் பருந்து களுக்குப் பயிற்சி அளிக்கிறார்கள். இவை ஆகாயத்தில் பறக்கும் பறவை கள் மீதும் தரை மீது தென்படும் பறவைகள் மீதும் சட்டெனப் பாய்ந்து அவற்றைத் தூக்கி வரும்.



வட இந்தியாவில் சில அரச குடும் பங்கள் பருந்துகள் போட்டிகளை நடத்தி வந்தனவாம். இதில் பறக்க விடப்படும் பருந்துகள் பறவை களைப் பிடித்து அவற்றின் இறகு களைப் பிய்த்து எறிந்து விட்டு எஞ் சிய உடல் பகுதியைச் சாப்பிட்டு விடுகின்றன.

உலகில் பருந்துகளில் அறுபது வகை இருப்பதாகக் கூறுகிறார்கள். இவற்றின் அலகின் மேற்பகுதி உறுதியாயும் தட்டையாகவும் கூராகவும் இருக்கும். ஒருவகைப் பருந்தின் தலையின் இரு பக்கங்களிலும் கருப்புக் கோடுகள் தென்படும். இவற்றின் இறக்கைகளும் மிகப் பெரியவை. உடலின் அடிப்பகுதி இளம் ரோஜா நிறத்தில் இருக்கும். இவற்றில் சில கோடுகளும் தென்படும்.

மனித நடமாட்டமில்லாத மலைப் பகுதிகளில் உயரமான இடத்தில் இவை கூடுகளைக் கட்டுகின்றன. பெண் பருந்து ஆண் பருந்தைவிடப் பருத்திருக்கும்.



# நம் தற்கால இலக்கியம்

பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளியாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.

ஆசிரியர்

## அமிர்தா ப்ரீதமின் 'பிஞ்ஜாரி'



இந்திய பாகிஸ்தான் பிரிவினைக்கு முன் பஞ்சாபில் ஒரு கிராமத்தில் புரோ என்ற அழகிய இளம் பெண் இருந்தாள். அவளுக்கும் அடுத்த ஊரிலிருந்த ராம்சந்திற்கும் திருமணம் நிச்சயமாயிற்று. ஆனால் ரஷீத் என்ற முஸ்லீம் இளைஞன் அவளைத் தூக்கிக் கொண்டு போய் விட்டான். இதற்குக் காரணம் புரோவின் முன்னோர்களுக்கும் ரஷீதின் முன்னோர்களுக்கும் ஏற்பட்ட பகைமை தான்.

ஒருநாள் புரோ தான் அடைக்கப்பட்ட அறையிலிருந்து தப்பித்தன் தன் வீட்டை அடைந்தாள். ஆனால் அவளது பிறந்த வீட்டில் அவளை ஏற்கத் தயாராக இல்லை. இந்துப் பெண் ஒருத்தி ஒரு முஸ்லீமின் வீட்டில் சில நாட்கள் இருந்து விட்டு வந்தது தகாது எனக் காரணம் கூறினார்.

புரோ வேறு வழி இல்லாமல் தன் வீட்டை விட்டுக் கிளம்பினாள். ரஷீத் அவளுக்குப் புகலிடம் கொடுத்து அவளை மணந்து கொண்டான். அவர்கள் அந்த ஊரை விட்டு வேறு ஊருக்குப் போய் விட்டார்கள்.

புரோவின் தங்கை ராம் சந்தை மணந்து கொண்டாள். ராம்சந்தின் தங்கை லாஜோ புரோவின் தம்பியை மணந்துக் கொண்டாள். ஆனால் புரோவிற்குத் தன் பிறந்த வீட்டின் தொடர்பே அறுந்து போயிற்று. புரோவின் பெயர் ஹமீதாவாக மாற்றப்பட்டது. அவளது கணவன் ரஷீத் அவளை மிகப் பிரியத்துடன் நடத்தி வந்தான். அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தையும் பிறந்தது.

சில ஆண்டுகள் கழிந்தன. பாரத பாகிஸ்தான் பிரிவினை ஏற்பட்டது. நாட்டில் கலவரங்கள் மூண்டன. முஸ்லீம்களும் இந்துக்களும் பல இடங்களில் ஒருவரை ஒருவர் தாக்கி அடித்துக் கொன்றார்கள். புரோ இருந்த பகுதி பாகிஸ்தானில் இருந்தது. அங்குள்ள ஹிந்துக்கள் அடித்து விரட்டப்பட்டார்கள்.

சிலர் பயந்து அதே ஊரில் ஒரு பெரிய வீட்டில் புகுந்து மறைந்து கொண்டார்கள். அந்த வீட்டிற்குக் கலகக்காரர்கள் தீ வைத்தனர். தக்க சமத்தில் போலீஸ் வந்து காத்த போதிலும் அவர்களில் மூவர் தீயில் வெந்துபோயினர். காப்பற்றப்பட்டவர்கள் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டனர். தீக்கிரையான மூவரின் எலும்புக் கூடுகள் மட்டும் அங்கேயே கிடந்தன.

இந்தியா திரும்பும் ஹிந்துகள் ஒருநாள் இரவு புரோ இருந்த கிராமத்தில் கழித்தார்கள். தன்னை மணக்க இருந்த ராம்சந்தை புரோ அப்போதுதான் முதல் தடவையாகப் பார்த்தான். அப்போது அவளுக்கு அவளது தம்பியின் மனைவி லாஜோ இருக்கும் இடம் தெரியவில்லை என்பது தெரிந்தது.



மறுநாள் காலை ஹிந்துக்கள் இந்தியாவுக்கு கிளம்பினார்கள். லாஜோ ஒரு விதவையின் வீட்டில் இருக்க வேண்டி வந்தது. அழகியான அவளை அந்த விதவையின் மகன் மணக்க எண்ணினான். ஆனால் புரோ தன் கணவனின் உதவியோடு லாஜோவைத் தூக்கி வந்து அவளது கணவனாண தன் தம்பியிடம் ஒப்படைத்தாள்.

புரோவின் தம்பி அவளைத் தன்னோடு இந்தியாவிற்கு அப்போதே வந்துவிடும்படிக் கூறினான். ஆனால் அவன்தன் கணவன் ரஷீதைவிட்டு வர இணங்கவில்லை, முதலில் பகைமை காரணமாக ரஷீத் அவளைத் தூக்கிச் சென்றபோதிலும் பிறகு அவளது கணவனாகி அன்புடன் அவளிடம் நடந்து கொண்டதே அதற்குக் காரணம்.

கொள்ளை, கொலைகளுக்கு ஆளாகும் பெண்களின் அவல நிலையைச் சித்தரிக்கும் நாவல் அமிர்தா பீரிதமின் பிஞ்ஜாரி. பஞ்சாபி மொழியின் சிறந்த எழுத்தாளர் இவர். சாகித்திய அகாடமி, ஞானபீட விருதுகளை இவர் பெற்றவர்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. கிருஸ்துவர்கள் துயரச் சின்னமாக கருப்புத் துணிகளை அணிகிறார்கள். இது போல் சீனர்கள் எந்த நிறத் துணி அணிகிறார்கள்?
2. பம்பாயின் கேட் வே ஆப் இண்டியா யாரை கௌரவிக்கக் கட்டப்பட்டது?
3. விக்டோரியா ராணி இங்கிலாந்தை எவ்வளவு ஆண்டுகள் ஆண்டார்?
4. கபூகி என்ற நடன நாடகம் எந்நாட்டினுடையது?
5. ஐக்கிய அமெரிக்கா நாடுகளில் ஒருநாடு தான் சுதந்திரநாடு என அறிவித்து பிறகு அமெரிக்க அரசியல் சட்டத்தை ஏற்றது. அந்த நாடு எது?
6. ஆங்கிலேயர் 1788ல் கைதிகள் குடியிருப்பு என ஆஸ்திரேலியாவின் எந்த நகரை அறிவித்தார்கள்?
7. சுமார் மூவாயிரம் ஆண்டுகளாகச் சுதந்திரமாக உள்ள ஆப்பிரிக்க நாடு எது?
8. 2400 ஆண்டுகளுக்குமுன் மரண தண்டனை பெற்ற கிரேக்க தத்துவ ஞானி யார்?
9. நம் நாட்டு முதலாவது செய்தித்தாள் 'பெங்கால் கெஜட்'டை வெளியிட்டவர் யார்?
10. சைனாவின் முதலாவது சக்கரவர்த்தி யார்?
11. பூமியில் மிகக் குளிர்ந்த பகுதி எது?
12. சர், ஐஸக் பிட்மென் எதனால் புகழ் பெற்றார்?
13. தாஜ்மஹலை உருவாக்கிய பாரசீகச் சிற்பி யார்?
14. முதன்முதலாக பெண்களுக்கு வாக்களிப்பு உரிமை அளித்த நாடு எது?
15. மிக உயரமான இடத்திலுள்ள தலைநகர் எது?
16. வானவெளியில் முதலில் பயணம் செய்த பெண்மணி யார்?
17. மீடர்கேஜிற்கும் பிராட் கேஜிற்கும் உள்ள வித்தியாசம் என்ன?
18. நம் நாட்டில் புகழ்பெற்ற சூரியதேவன் கோவில் எது?
19. கர்நாடக சங்கீத திரிமூர்த்திகள் யார்?
20. பிரம்ம புத்திரநதி எங்கு எந்தக் கடலில் கலக்கிறது?

## விடைகள்

1. வெள்ளை.
2. இங்கிலாந்து மன்னர் ஐந்தாம் ஜார்ஜ்.
3. 63 ஆண்டுகள்
4. ஜப்பான்
5. ரோடோ தீவு.
6. சிட்னி.
7. எதியோப்பியா.
8. சாக்ரடீஸ்.
9. ஜேம்ஸ் அகஸ்டஸ்ஹிகி
10. செங்கிஸ்கான் பேரன் குப்லாய்கான்
11. அண்டார்டிகாவின் போஸ்டக் ஸ்டேஷன்
12. குறுக்கெழுத்தைக் கண்டுபிடித்தவர்.
13. உஸ்தாத் ஈசா.
14. நியூஜிலாந்து.
15. பொலியாவின் தலைநகர் லாபெஸ்.
16. வாலெண்டினா தெரிஸ்கா.
17. மீட்டர்கேஜ் ஒரு மீட்டர். பிராட்கேஜ் 1.675 மீட்டர்
18. ஒரிஸ்ஸாவிலுள்ள கோணார்க்.
19. தியாகப்பிரம்மம், சியாமா சாஸ்திரி, முத்துசாமி தீட்சதர்.
20. நவகாளியருகே வங்காள விரிகுடாவில்.




கஜ்சிம்மன் என்ற மன்னன் வேட்டைக்குப் போய் காட்டில் வழி தவறி முள்ளிலும் புதரிலும் விழுந்தான். அப்போது அவனை ஒரு பாம்பு கடித்துவிட்டது. அவன் தன் நினைவு இழந்து விழுந்து கிடந்தான்.

அவன் தன் நினைவு பெற்றுக் கண் விழித்துப் பார்த்தபோது ஒரு ஆசிரமத்தில் ஒரு முனிவரின் முன் படுத்திருப்பதை உணர்ந்தான். அவர் "அப்பனே! நீ நினைவு இழந்து கிடந்ததைக் கண்டு என் சீடர்கள் இங்கு தூக்கிக் கொண்டு வந்தார்கள். இப்போது நீ எப்படி இருக்கிறாய்?" என்று கேட்டார்.

கஜசிம்மன் தன் உடலை ஒரு முறை பார்த்தான் உடலில் முட்கள் கிழித்து ஏற்பட்ட கீறல்களோ காயங்களோ இருக்கவில்லை. தன்னை பாம்புக் கடித்தும் விஷம் உடலில் பரவாதிருப்பதையும் அவன் கண்டான். அவன் முனிவரை வணங்கி "சுவாமி! என் காயங்கள் மறைந்துபோயின. பாம்பின் விஷமும் என்னை ஒன்றும் செய்யவில்லை. உங்கள் சக்தியே அபாரம். நீங்கள் சாதாரணப்பட்டவர் அல்ல. உங்களைப் போன்றவர்கள் இந்த மாதிரிக் காட்டில் இருப்பது சரியல்ல. என்னுடன் தலைநகருக்கு வந்து அங்கேயே தங்கி மக்களின் நோய்களைப் போக்குங்கள்" என்று வேண்டினான்.

அதுகேட்டு முனிவர் சிரித்து "நான் இகலோக சுகங்களில் இச்சை கொள்ளாதவன். எனக்கு வைத்தியம் ஓரளவுதான் தெரியும். நான் குடும்ப வாழ்க்கை நடத்தியபோது தர்மராஜன் என்ற மாபெரும் வைத்தியரிடம் பணி புரிந்து கொஞ்சம் கற்றுக் கொண்

—அருணா கிருஷ்ணசாமி—



டேன். அவருக்குத் தெரிந்ததில் ஆயிரத்தில் ஒரு பங்குதான் எனக்குத் தெரியும். உன் நாட்டிலேயே அப்படிப்பட்ட வைத்தியர் இருக்கும்போது என்னை நீ அழைத்துக் கொண்டு போக வேண்டியதில்லை'' என்றார்.

கஜசிம்மன் ஆச்சரியப்பட்டு ''என் நாட்டில் அப்படி ஒரு மா பெரும் வைத்தியர் இருக்கிறாரா? இது நாள் வரை இது எனக்கு தெரியவில்லையே'' என்றான். அப்போது முனிவர் ''இப்படி ஒரு வைத்தியர் இருப்பது கூட உனக்கு தெரியவில்லை என்றால் நீஎன்ன தான் ஆட்சி புரிகிறாய். அவரை நீ இதுவரை கௌரவிக்காதது மாபெரும் தவறு. அவர் தவிட்டூரில் இருக்கிறார். நீ உடனே அங்கே போய் அவரைப் பார்'' என்றார்.

கஜசிம்மனும் அவ்வாறே செய்வதாக கூறி முனிவரின் அறிவுரைகளையும் ஆசிகளையும் பெற்றுக் கொண்டு தன் தலைநகருக்குச் சென்றான். அவன் உடனே தன் அமைச்சர்களையும் அரசாங்க வைத்தியரையும் கூப்பிட்டு ''நம் நாட்டில் தவிட்டூரில் தர்மராஜன் என்னும் மாபெரும் வைத்தியர் இருக்கிறாராம். அவரைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

மந்திரிகளோ தமக்குத் தெரியாது என்றனர். அரசாங்க வைத்தியரோ ''அரசே! இந்த நாட்டில் என்னைவிட மாபெரும் வைத்திய் என்று யாருமே இல்லை. தவிட்டூர் தர்மராஜன் என்று பெயரைக் கேட்டிருக்கிறேன். அவரிடம் வைத்தியம் செய்து கொள்ளப் போகும் பணக்காரர்கள் கூட பிச்சைக்காரர்களாக வேண்டியது தானாம்'' என்றார்.

அதைக் கேட்ட கஜசிம்மன் ஆச்சரியப்பட்டு ''இதை உங்களுக்கு யார் சொன்னார்கள்?'' என்று கேட்டான். அரசாங்க வைத்தியரும் ''என் நண்பன் தனபாலகுப்தன் என்பவன்தான் இதைச் சொன்னான். ஆனாலும் ஒரு மனித

னுக்கு இவ்வளவு பணத்தாசை பிடிக்கக்கூடாது'' என்றார். மன்னன் அரசாங்க வைத்தியரையும் மற்ற மந்திரிகளையும் போகச் சொல்லிவிட்டுத் தன் முதலமைச்சரை மட்டும் இருக்கச் சொன்னார்.

மற்றவர்கள் போனபின் மன்னன் முதலமைச்சரிடம் "நான் தர்மராஜனைப் பற்றி மிக உயர்வாகக் கேள்விப்பட்டேன். நம் அரசாங்க வைத்தியர் பொறாமை காரணமாக ஏதோ சொல்கிறார் என்றே எனக்குத் தோன்றுகிறது'' என்றான்.

முதலமைச்சரும் "நாம் உண்மையை அறிய தவிட்டூருக்குப் போக வேண்டும். அதனால் நாம் இருவரும் மாறுவேடத்தில் போய் உண்மை என்ன என்று தெரிந்து கொள்ளலாம்'' என்று யோசனை கூறினான். கஜசிம்மனும் அது சரியான யோசனை என ஏற்றான். அவர்கள் இருவரும் மாறுவேடம் பூண்டு தவிட்டூரை அடைந்தார்கள்.

அந்த ஊரில் தர்மராஜனுக்கு பெரும் புகழோ பெயரோ இருப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் அந்த ஊரில் வசிக்கும் தனபாலகுப்தனைக் கண்டு பேசியதில் அவன் அரசாங்க வைத்தியர் கூறியதை அப்படியே சொன்னான்.

மேலும் தனபாலகுப்தன் சிரித்து "நான் இப்படிச் சொன்னது என் சொந்த அபிப்பிராயம்



அல்ல. தர்மராஜனின் ஆருயிர் நண்பனான கவி கருணாமிர்தம் கூறியதைத்தான் சொன்னேன். சந்தேகமிருந்தால் நீங்கள் அந்தக் கவிஞரையே சந்தித்துக் கேளுங்கள்" என்றான்.

கஜசிம்மனும் முதலமைச்சரும் கருணாமிர்தத்தைக் கண்டு பேசினார்கள். அப்போது கருணாமிர்தம் "தர்மராஜன் நல்ல வைத்தியனே. ஆனால் அவனுக்கு அதிர்ஷ்டம் என்பதுதான் இல்லை" என்று மனம் நொந்து கூறினான்.

அதுகேட்டு கஜசிம்மன் ஆச்சரியத்தோடு "ஏன் அப்படிக் கூறுகிறீர்கள்?" என்று கேட்டான். கவியும் "தர்மராஜன் நல்ல வைத்தியன் மட்டுமல்ல, நல்ல குணம் படைத்தவன் என்ற பொருளில் நான் அப்படிக் கூறினேன். ஆனால் நான் சொன்னதைத் தவறாக அல்லவா நீங்கள் எல்லாம் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். அவனிடம் வரும் பணக்காரர்கள் ஏழையாக வேண்டும் என நான் கூறிய தன் பொருள் பணக்காரர்கள் ஏழைபோல வேடம் பூண்டு வந்தாலே அவன் வைத்தியம் செய்வான் என்பதாம். அவன் ஏழைகளுக்கு மட்டுமே வைத்தியம் செய்கிறான். அதனால் பெரிய மனிதர்களிடையே அவனுக்குப் பெயர் இல்லை. பணக்காரன் ஏழையாக வந்தாலே அதாவது ஏழைபோல வேஷம் போட்டுக் கொண்டு வந்தாலே அவனிடம் சிகிச்சை பெற முடியும் என்ற பொருளில் அப்படிக் கூறினேன். அது அனர்த்தமாகிவிட்டது" என்றான் அழாதகுறையாக.

மன்னனுக்கு அப்போது கவிஞன் ஒரு பொருள் படக் கூற அதைக் காண்பவர்கள் வேறுவிதமாக சொல்கிறார்கள் என்பது புரிந்தது. மன்னன் தர்மராஜனை தர்பாருக்கு அழைத்துத் தக்க விதத்தில் மரியாதை செய்து கௌரவித்தான்.





# எப்படி மாறினான்?

பாஞ்சால நாட்டில் ரங்கதாஸ் என்ற இளைஞன் இருந்தான். அவன் மகா சோம்பேறி. தூங்குவதும் சாப்பிடுவதும் மட்டுமே அவனது வேலை. தாய் தந்தையரை இழந்த அவ்னை அவனது பாட்டி செல்லமாக வேறு வளர்த்து வந்தாள்.

பாஞ்சால நாட்டின் அண்டை நாடு சிந்து. இந்த இருநாடுகளுக்குமிடையே நீண்ட காலமாகவே பகைமை இருந்து வந்தது. பாஞ்சாலத்தை வெல்ல சிந்து தேச மன்னன் சிம்மபாலன் போருக்கான ஏற்பாடுகளைச் செய்து படையோடு வந்தான்.

ஒற்றர்கள் வாயிலாகப் படையெடுப்பு பற்றி அறிந்த பாஞ்சால மன்னன் தன் நாட்டிலுள்ள இளைஞரெல்லாம் படையில் சேர வேண்டுமென்று அறிவித்தான்.

அந்த அறிவிப்பைக் கேட்டு பல வாலிபர்கள் படையில் சேரலானார்கள். படையில் சேராமலிருந்த வாலிபர்களைத் தேடிப்பிடித்தும் கொண்டு வந்தார்கள். அவர்களில் ரங்கதாசும் ஒருவன்.

ரங்கதாஸ் மிரள மிரள விழித்தான் அவனுக்கு வேலை செய்வதே சற்றும் பிடிக்காது. இந்த நிலையில் படையில் சேர்ந்து போர் வீரனாகப் போர்புரியச் சொன்னால் அவனால் அது எப்படி முடியும்? போர்க்களத்தில் போர் புரியாமல் நன்றாகச் சாப்பிட்டுவிட்டுப் படுத்துத் தூங்க முடியுமா? அதெல்லாம் செய்ய முடியாதே. எனவே அவன் படையில் சேர்வதை தவிர்க்க விரும்பினான்.

ரங்கதாஸ் "என்னை ஏன் படையில் சேர்க்கிறீர்கள்? படை,

—சிவனார் செல்வன்—



யாமல் வாளை மட்டும் எடுத்துக் கொண்டு போர்க்களத்திற்குச் சென்றான். அவன் தன் இடுப்பில் தட்டையும் தின்பண்டங்களையும் கட்டிக் கொண்டும் சென்றான். குடிக்க நீர் கூட ஒரு சொரக் குடுக்கையில் எடுத்துக் கொண் டான்.

போர்க்களத்தில் இருநாட்டு படைகளும் மும்முரமாகப் போர் புரிந்தன. ரங்கதாசோ பயந்து நடுநடுங்கிக் கொண்டிருந்தான். இனிதான் உயிர் வாழப் போவ தில்லை என்று கண்டு கொண் டான். போர்க்களத்திலிருந்து தப்பி ஓடவும் முடியவில்லை. போர்க் களத்தில் யானைகளும் குதிரை களும் ரதங்களும் ஈட்டிகளும் ஏராளமாக இருப்பது கண்டு திகைத் துப் போனான்.

அப்போது போர்க்களத்தில் காயமுற்று முக்கி முனகிக் கொண்டிருந்த ஒரு கிழ வீரனை ரங்கதாஸ் கண்டான். அவன் ரங்கதாசைப் பார்த்துத் தனக்குக் குடிக்கத் தண்ணீர் வேண்டும் என்று சைகை காட்டினான். ரங்க தாசும் தன் குடுக்கையிலிருந்த நீரில் கொஞ்சம் அவனுக்குக் கொடுத்தான்.

அக்கிழவன் தன்னிடம் இருந்த கத்தியை ரங்கதாசிடம் கொடுத்து "இந்தக் கத்தியால் நம் எதிரி நாட்டின் மன்னனைக் குத்திக்

போர் என்றால் என்ன என்று எனக்குத் தெரியாது. சாப்பாடும் தூக்கமும்தான் நான் அறிவேன்" என்றான். ஆனால் அவனைப் பிடித்துக் கொண்டுபோன வீரர் களோ "அதெல்லாம் எங்களுக் குத் தெரியாது. நீ படையில் சேர்ந்து பயிற்சி பெற்று போர்க் களத்திற்குப் போக வேண்டியது தான்" என்று கூறினார்கள்.

சிந்து நாட்டின் படை பாஞ் சால எல்லையை அணுகிவிட் டது. பாஞ்சால வீரர் கவசம் தரித்து கேடயம் ஏந்தி வாட்களை எடுத்துக் கொண்டு போர்க்களத் திற்குச் சென்றார்கள். ஆனால் ரங்கதாஸ் மட்டும் கவசம் அணி

கொல்ல நினைத்தேன். ஆனால் என்னால் முடியாமல் போகிறது. கடவுள்தான் உன்னை இந்த சமயத்தில் என்னிடம் அனுப்பி இருக்கிறார். இந்தக் கத்தியை நீ எடுத்துக் கொண்டு நான் செய்ய நினைத்த வேலையைச் செய்து முடி. இந்தா, என் மோதிரத்தை வாங்கிக் கொள். என் பேத்தியைக் கண்டால் இதைக்காட்டி அவளை மணந்து கொள்" என்று கூறிக் கத்தியையும் மோதிரத்தையும் அவனிடம் கொடுத்துவிட்டு இறந்தான்.

ரங்கதாசோ தான் எப்படிப் போர்க்களத்திலிருந்து தப்பி ஓடுவது என்று யோசிக்கலானான். அவனுக்கு ஒரு வழி தெரிந்தது.



அவன் இறந்து கிடப்பவன் போலப் படுத்துத் தன் ஆடைகளில் காயமுற்று இறந்த வீரனின் ரத்தத்தை எடுத்துத் தடவிக் கொண்டான். அவன் கண்ணை மூடியதும் நன்கு தூங்கிவிட்டான். திடீரெனப் பல குதிரைகள் ஓடி வ்ரும் சத்தம் சற்று நேரத்தில் அவனது தூக்கத்தைக் கலைத்தது. வேகமாக ஓடி வந்த ஒரு குதிரை அவனது காலை மிதிக்கவே அவன் துள்ளி எழுந்து நின்றான்.

அப்போது சிந்து மன்னன் ஒரு குதிரை மீது வந்து கொண்டிருந்தான். போர்க்களத்தில் கவசமோ கேடயமோ இல்லாமல் நிற்கும் ரங்கதாசைப் பார்த்து அவன் தன் மனதில் "இவன் யாரோ மாபெரும் வீரன் போலிருக்கிறது. அதனால் இவனைக் கொல்கிறேன்" என்று எண்ணித் தன் வாளால் குத்தினான்.

ஆனால் அந்தக் கத்தி ரங்கதாசின் இடுப்பில் தின்பண்டங்களை வைத்திருந்த பாத்திரத்தின் மீது பட்டு 'டங்'கென ஒலியை கிளப்பியது. இந்த ஒலி கேட்டு சிந்து மன்னனின் குதிரை மிரண்டு மன்னனைக் கீழே தள்ளிவிட்டு ஓடிப் போயிற்று. ரங்கதாசோ தன்னைக் காத்துக் கொள்ள இறந்து போய் விழுந்து கிடந்த கிழவனின் உடலை எடுத்து சிந்து

மன்னன் மீது வீசி எறிந்தான். அதோடு அவன் கையிலிருந்து கத்தியும் அந்த மன்னன் மீது விழுந்தது.

அந்தக் கத்தி சிந்து மன்னனின் மார்பில் பாயவே அவன் 'ஆ'வென அலறிக் கொண்டு கீழே விழுந்து இறந்தான். சிந்து நாட்டுப் படை வீரர்கள் தம் மன்னன் இறந்தது கண்டு பயந்து போர்க்களத்திலிருந்து ஓடி விட்டனர். ரங்கதாஸ் தான் சிந்து மன்னனைக் கொன்றவன் என்ற செய்தி பாஞ்சால மன்னனுக்குக் கிடைத்தது.

பாஞ்சால மன்னன் ரங்கதாசைக் கண்டு பாராட்டி "உன்னைப் போன்ற மாபெரும் வீரன் உலகிலேயே இல்லை" என்று புகழ்ந்தான். அப்போது ரங்கதாஸ் "நான் போர்க்களத்தில் நின்று களைத்துப் போய்விட்டேன். நான் வயிறு நிறையச் சாப்பிட்டு விட்டுத் தூங்க வேண்டும்" என்றான்.

மன்னன் ரங்கதாசிற்கு அவன் கேட்ட வசதிகளைச் செய்து கொடுத்தான். ரங்கதாசும் நன்கு சாப்பிட்டு விட்டு மாளிகையில் படுத்துத் தூங்கினான். இவ்விதமாய் அவன் ஒரு வார காலத்தை சாப்பிடுவதிலும் தூங்குவதிலும் கழித்தான். அதன் பிறகு அவன் தன் ஊருக்குப் போய் பல்லக்கில் தன் பாட்டியை அமர்த்தித் தலைநகருக்கு அழைத்து வந்தான். பாட்டிக்கும் தன் பேரன் அடைந்த உயர்வு ஆச்சரியத்தையும் மகிழ்ச்சியையும் அளித்தன.

சில நாட்களுக்குப் பின் ரங்கதாஸ் கிழ வீரனின் பேத்தியைத் தேடிக் கண்டு பிடித்தான். அவளுக்குக் கிழவனின் மோதிரத்தைக் காட்டி அவனது விருப்பத்தைக் கூறவே அவள் அவனை மணக்க சம்மதித்தாள். பாஞ்சால மன்னனே முன்நின்று அவர்களது விவாகத்தை நடத்தி வைத்தான். இதற்குப்பின் ரங்கதாஸ் சோம்பேறியாக இருக்கவில்லை.






இராமர் பரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்தை அடைந்தார். அவர் முனிவரை வணங்கி "ஐயனே! அயோத்தியில் மக்கள் சுகமாகத் தானே இருக்கிறார்கள்? பரதன் நன்கு ஆண்டு வருகிறானா? என் தாய்மார்கள் எப்படி இருக்கிறார்கள்?" என்று கேட்டார்.

அதற்கு பரத்துவாஜரும் "பரதன் துறவிபோல வாழ்ந்து வருகிறான். அவனது தலையில் சடைகள் விழுந்து விட்டன. அவன் உன் பாதுகைகளைப் பூசித்து வைத்துக் கொண்டு ஆட்சி புரிந்து வருகிறான். அவன் உன் வருகையைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான். அயோத்தியில் எல்லோரும் சௌக்கியமாகவே இருக்கிறார்கள்" என்றார். அவர் இராமரிடம் அன்று அங்கு தங்கிவிட்டு மறுநாள் அயோத்திக்குப் போகும்படிக் கூறினார்.

அப்போது இராமர் அனுமாரைக் கூப்பிட்டு "அனுமாரே! உன்னை பரதனிடம் இப்போது அனுப்ப நினைக்கிறேன். நீர் சிருங்கபேரிபுரத்திலுள்ள குகனைக் கண்டு நான் சீதையுடனும் லட்சுமணனுடனும் அயோத்திக்குத் திரும்பிச் செல்லும் நற்செய்தியைக் கூறும். அதுகேட்டு அவன் மகிழ்ந்து போவான். அவன் உமக்கு அயோத்திக்குச் செல்லும் வழியைக் கூறி பரதனைப் பற்றியும் தகவல் கொடுப்பான். நீர் பரதன் இருக்கும் இடத்



திற்குப் போய் நான் சீதையுடனும் லட்சுமணனுடனும் கிஷ்கிந்தாபுரி மன்னன் சுக்கிரீவனுடனும் இலங்கை மன்னன் விபீஷணனுடனும் அயோத்திக்கு வந்து கொண்டிருப்பதைக் கூறும். மேலும் பரதன் என்னை சந்தித்துப்போன பின் இன்றுவரை நடந்ததை எல்லாம் அவனிடம் விவரமாகக் கூறும். பரதனைப் பற்றி நான் நன்கு அறிவேன். அவன் நான் எப்போது திரும்பி வருவேன், நாட்டை எப்போது என்னிடம் ஒப்படைக்கலாம் என்றே துடித்துக் கொண்டிருப்பான். அதனால் அவனுக்கு நான் வருவதை முன் கூட்டியே தெரிவித்து அவனை மகிழச் செய்ய வேண்டும். நீர் போய் இந்த நற்செய்தியைக் கூறி விட்டு விரைவிலேயே திரும்பி வாரும்'' என்றார்.

இராமர் இவ்வாறு கூறியதும் அனுமார் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு உயர எழும்பி ஆகாய மார்க்கமாய் அயோத்திக்குச் சென்றார். வழியில் அவர் சிருங்கபேரிபுரத்தில் இறங்கி குகனைக் கண்டார். அவனிடம் அவர் ''இராமர் தாம் நலமாக இருப்பதை உன்னிடம் சொல்லச் சொன்னார். இப்போது அவர் சீதையுடனும் இலட்சுமணனுடனும் பரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்திற்கு வந்து தங்கி இருக்கிறார். அங்கிருந்து நாளை அவர் கிளம்புவார். நீ விரைவிலேயே அவரைக் காணலாம். நான் இப்போது பரதனைக் காணப் போயாக வேண்டும்'' என்று கூறி உயர எழும்பி ஆகாய வழியாக நந்திக் கிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

நந்திக் கிராமம் அழகான சூழ்நிலையில் அமைந்திருந்தது. எங்கு பார்த்தாலும் பச்சைப் பசேலென்று இருந்தது. அங்கிருந்து அயோத்தியை அடைய இரண்டே நாழிகைகள்தான் பிடிக்கும். பரதன் நந்திக் கிராமத்திலேயே குடிலை அமைத்துக் கொண்டு பதினான்கு ஆண்டுகளைக் கழித்து விட்டான். பதினான்கு ஆண்டுகள் முடியப் போகிறதே, இன்னமும் இராமர் வர

வில்லையே என்று ஏங்கி சுற்றி லும் அவ்வப்போது பார்த்தவாறே இருந்தான்.

அனுமார் பரதனைக் கண்டு வணங்கி "இராமர் நலமாக இருக் கிறார் என்பதை உன்னிடம் சொல் லச் சொன்னார். அவர் இப் போது பரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்தில் தங்கி இருக்கிறார். நாளை அங்கிருந்து கிளம்பி விரை வில் இங்கு வந்து சேர்வார். அவர் சீதையுடனும் இலட்சுமணனு டனும் வானர மன்னன் சுக்கிரீவனு டனும் ராட்சஸ மன்னன் விபீஷண னுடனும் வந்து கொண்டிருக்கி றார்" என்று கூறினார்.



அதைக்கேட்ட பரதன் "ஆகா! இராமர் வந்து விட்டாரா!" என்று மகிழ்ச்சி கடலில் மூழ்கினான். பிறகு அவன் அனுமாரைப் பார்த்து "எனக்கு இவ்வளவு இனிப்பான செய்தியைக் கூறியதற்கு உங் களுக்கு என்ன பரிசு கொடுத்தா லும் தகும். என்ன வேண்டுமானா லும் கேளுங்கள். கொடுக்கிறேன்" என்றான். அனுமாரோ "அதெல் லாம் ஒன்றும் வேண்டாம்" என் றார். எனவே பரதன் இராமர் பற் றிக் கேட்ட கேள்விகளுக்கு எல் லாம் விவரமாய் பதிலளித்தார்.

பரதன் அவர் கூறியதை எல் லாம் கேட்டு மகிழ்ந்து போய் சத்து ருக்கனனிடம் "இராமர் விரைவி லேயே வரப்போகிறார். எல்லோ ரும் குளித்து நல்ல ஆடைகளை அணிந்து கொள்ளச் சொல். வழி எங்கும் தோரணங்களையும் புஷ்ப மாலைகளையும் கட்டித் தொங்க விடுங்கள். எங்கும் வாசனைத் திரவியங்களைத் தெளியுங்கள். வீதிகளில் வண்ணக் கோலங் களைப் போடச் சொல்" என்று கட்டளை இட்டான்.

சத்துருக்கனனும் பல பணியாட் களை அழைத்து பரதனின் கட் டளையைக் கூற, அவர்களும் அவற்றை எல்லாம் செய்து முடித் தார்கள். மங்கள இசை முழங்கி யது. இசைவாணர்கள் பாடல் களைப் பாடிக் கொண்டு இருந் தார்கள். இவ்வாறாக நந்திக் கிரா

மத்திலிருந்து அயோத்தி வரை எல்லா இடங்களிலும் ஒரே கோலா கலமாக இருந்தது.

மக்கள் கூட்டம் எங்கும் காணப் பட்டது. பிராமணர்கள், க்ஷத்திரி யர்கள், வைசியர்கள் மற்ற இனத் தவர்கள் என யாவரும் கூடிப் பேசி இராமரது வருகையை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சிலர் யானைகள் மீதும் சிலர் குதி ரைகள் மீதும் சிலர் ரதங்களிலும் அமர்ந்து இராமரைக் காண ஆவலுடன் இருந்தனர். வீரர்கள் தம் ஆயுதங்கள் மின்ன தெருக் களில் நடமாடிக் கொண்டிருந் தார்கள். மந்திரிகள் அனைவரும் நந்திக் கிராமத்தில் வந்து கூடி னார்கள். தசரதனின் மனைவி யரும் வந்து சேர்ந்தனர்.

பரதன் இராமரின் பாதுகை களைத் தன் தலை மீது வைத்துக் கொண்டு இராமரின் வருகையை எதிர்பார்க்கலானான். அவனோடு மந்திரிகளும், பிரமுகர்களும், பிராம் மணோத்தமர்களும் மாலைகளைக் கைகளில் வைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார்கள்.

சற்று நேரமானதும் பரதன் பொறுமை இழந்தவனாய் "இன்ன மும் இராமர் வரவில்லையே. ஏன் இவ்வளவு தாமதம் ஆகி றது?" என்று அனுமாரைப் பார்த் துக் கேட்டான். அனுமாரும் "பரத் துவாஜ முனிவரின் ஆசிரமத்தி லிருந்து கிளம்பச் சற்றுத் தாமத மாகி இருக்கலாம். அவர்கள்



வரும் சத்தம் எனக்குக் கேட்கிறது. இதோ! புஷ்பக விமானம் வந்து விட்டதே! இது குபேரனின் விமானம். இதனை இராவணன் வைத்திருந்தான். இராவணனை இராமர் கொன்ற பின் அது இவர் வசமாயிற்று. இதில்தான் இராமர், சீதை, இலட்சுமணன், சுக்கிரீவன், விபீஷணன் முதலானோர் அமர்ந்து வந்து கொண்டிருக்கிறார்கள்" என்று கூறினான்.

புஷ்பக விமானம் வந்து இறங்கியது. எல்லோரும் இராமர் வந்துவிட்டார் என்று கூறி வரிசையாக நின்றார்கள். அவர் விமானத்திலிருந்து இறங்கியதுமே பரதன் ஓடிப்போய் அவரை வணங்கி "ஆ! சொன்ன சொல் தவறாமல் தாங்கள் வந்து எங்களை எல்லாம் மகிழ்வித்து விட்டீர்கள்" எனக் கூறி நின்றான்.

பரதன் இராமரையும் சீதையையும் வணங்கினான். இலட்சுமணனைக் கட்டித் தழுவிக் கொண்டான். வானர மன்னன் சுக்கிரீவனையும், ராட்சஸ மன்னன் விபீஷணனையும் மற்ற வீரர்களையும் மரியாதையுடன் வணங்கி அன்புடன் வரவேற்றான். சுக்கிரீவனையும் விபீஷணனையும் பார்த்து "நீங்களும் எங்கள் சகோதரர்களாக ஆகிவிட்டீர்கள்" என்று மகிழ்ச்சியுடன் கூறினான்.

சத்துருக்கனனும் இராமரையும் இலட்சுமணனையும் சீதையையும் வணங்கினான். இராமர் தம் தாயா





ரான கௌசல்யையின் கால்களில் விழுந்து வணங்கினார். பிறகு கைகேயியையும் சுமித்ரையையும் கண்டு நமஸ்காரம் செய்தார். வசிஷ்ட முனிவரை வணங்கி அவரது ஆசிகளைப் பெற்றார்.

மக்கள் எல்லோரும் இராமரை உற்சாகத்துடன் வரவேற்றார்கள். பரதன் இராமரது பாதுகைகளை அவரது காலடியில் வைத்து அவற்றை அணிந்து கொள்ளும்படி வேண்டினான். பிறகு அவன் "இதுநாள் வரை இவற்றைப் பாதுகாத்துப் பூசித்து வந்தேன். தங்கள் உடமையை இதன் வாயிலாக நாட்டை ஒப்படைப்பதாக எண்ணி திரும்பக் கொடுக்கிறேன். ஏற்றுக்கொண்டு அயோத்திக்கு வந்து அரியாசனத்தில் அமர்ந்து நாட்டை ஆள வேண்டும்" என வேண்டினான்.

இராமர் பாதுகைகளை ஏற்றுக்கொண்டார். மக்களின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லாது போயிற்று. இராமருக்குப் பட்டாபிஷேகம் நடக்கப் போவது பற்றிப் பேசி அவர்கள் மகிழலானார்கள்.

பட்டாபிஷேகத்திற்கான முகூர்த்தம் குறிக்கப்பட்டது. இராமர் இலட்சுமணன், பரதன், சத்துருக்கனன், சுக்கிரீவன், விபீஷணன் ஆகியோர் மங்கள ஸ்நானம் செய்தனர். தசரதனின் மனைவியர் சீதையை அலங்கரித்தார்கள்.

சுமந்திரன் என்ற தேரோட்டி இரதத்தை ஓட்டி வந்து நிறுத்தினான். இராமர் அதில் ஏறி அமர்ந்து கொண்டார். அனுமாரும் ஸ்நானம் செய்து பட்டாடை உடுத்தி அயோத்திக்குக் கிளம்பினார்.

தசரதனின் அமைச்சர்களும் வசிஷ்டரும் முன்னதாக அயோத்திக்குப் போய்ப் பட்டாபிஷேகத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தனர். இராமருக்கு சுக்கிரீவனும் அனுமாரும் விபீஷணனும் செய்த மகத்தான உதவிகளை எல்லாம் கேட்டு மக்கள் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தனர்.

இராமர் தசரதனின் அறையில் போய் அமர்ந்தார். அரண்மனை

பூங்காவிலுள்ள விடுதிகளில் சுக்கிரீவன், விபீஷணன் முதலானோர் தங்க ஏற்பாடுகள் செய்யப்பட்டனர்.

சுக்கிரீவன் நான்கு தங்கக் குடங்களை நான்கு வானரப் பிரமுகர்களிடம் கொடுத்து நாற்கடல்களிலிருந்து அவற்றில் நீர் கொண்டு வரும்படிக் கூறினான். அனுமார், ஜாம்பவான், வேகதரிசி, ரிஷபன் ஆகிய நால்வரும் அக்குடங்களில் நாற்கடல்களின் நீரைக் கொண்டு வந்தார்கள். பரதக் கண்டத்து நதிகளின் நீரும் பல கலசங்களில் கொண்டு வரப்பட்டது.

இதற்குப் பிறகு முறைப்படி இராமரின் பட்டாபிஷேகம் நடக்கலாயிற்று. இராமரையும் சீதையையும் நவரத்தினங்கள் பதித்த பீடங்களில் உட்கார வைத்தார்கள். அதன்பிறகு ரித்விக்குகள், பிராம்மணர்கள், நகரப் பிரமுகர்கள் என்று யாவரும் புனித நீரால் அவர்களுக்கு அபிஷேகம் செய்தார்கள்.

இராமரும் சீதையும் புத்தாடைகளை உடுத்தி ஆபரணங்கள் அணிந்து அரியாசனத்தில் அமர்ந்தனர். சத்துருக்கனன் வெண்குடையைப் பிடித்துக் கொண்டு நின்றான். சுக்கிரீவன் வெண்சாமரம் வீசிக் கொண்டிருந்தான். விபீஷணனும் மற்றொரு பக்கம் நின்று வெண்சாமரம் வீசிக் கொண்டிருந்தான்.

தன் பட்டாபிஷேகம் முடிந்ததும் இராமர் ஏராளமான தானங்களைச் செய்தார். அவர் சீதையிடம் ஒரு முத்தாரத்தைக் கொடுத்து அதை அவளுக்குப் பிரியமானவருக்குப் பரிசாகக் கொடுக்கும்படிக் கூறினார். சீதை அதனை அனுமாருக்குக் கொடுத்தாள்.

எல்லோரும் பரிசுகளைப் பெற்றுக் கொண்டு தம் ஊர்களுக்குத் திரும்பிச் சென்றனர். இராமர் பரதனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி ஆட்சி புரிந்து வரலானார்.





# சொன்னபடி செய்தான்

சீன நாட்டின் ஒரு கிராமத்தில் ஒரு பணக்கார விவசாயி இருந்தான். அவனிடம் எந்த வேலையாளும் நிலைத்து இருந்து வேலை செய்தது இல்லை. தான் சொன்னபடிச் செய்யவில்லை என்று கூறி அவன் வேலைக்காரனுக்குச் சம்பளம் கொடுக்காமலேயே விரட்டி விடுவான். அதனால் அவனுக்கு வேலை செய்ய உள்ளூர் ஆள் யாருமே கிடைக்கவில்லை.

பணக்காரன் ஒரு வேலைக்காரன் கூடக் கிடைக்காமல் திண்டாடலானான். உள்ளூரிலிந்து வேலை செய்ய யாருமே தன் வீட்டிற்கு வரமாட்டார்கள் என்பது அவனுக்குத் தெரிந்து போயிற்று இனி வெளியூர் ஆள்தான் வர வேண்டும். அப்படி வருபவனைச் சுலபமாக ஏமாற்றி சம்பளம் கொடுக்காமல் வேலையிலிருந்து நீக்கி விடலாம். அவன் நோக்கம் சம்பளம் கொடுக்காமல் ஏமாற்றி வேலையாளிடம் வேலை வாங்கிக் கொள்வதுதானே!

இப்படி இருக்கையில் வெளியூரிலிருந்து ஒருவன் அந்தப் பணக்காரன் வீட்டில் வேலை செய்ய வந்தான். அவன் பார்க்க அப்பாவி போல இருந்தான். பணக்காரன் அவனிடம் ''நீ நான் சொல்கிறபடி வேலை செய்ய வேண்டும். தவறினால் உனக்குச் சம்பளமும் கிடையாது. வேலையிலிருந்தும் நீக்கி விடுவேன்'' என்றான். அவனும் அதற்குச் சம்மதிப்பதாகக் கூறி அவனிடம் வேலைக்கு அமர்ந்தான்.

அவன் முதல் நாள் எல்லா வேலைகளையும் சற்றும் தயங்காமல் செய்து முடித்தான். அதைக் கண்ட பணக்காரன் திகைத்துப்

—சீன நாட்டுப் பழங்கதை—

போனான். அந்த வேலையாள் தான் சொன்ன எந்த வேலையையும் மறுபேச்சு பேசாமல் செய்து முடித்து அவனுக்குப் பெருத்த ஏமாற்றமாக இருந்தது. அவனை எப்படி ஏமாற்றி வேலை சரியாகச் செய்யவில்லை என்று கூறி சம்பளம் கொடுக்காமல் எப்படி வேலையிலிருந்து நிறுத்துவது என்று யோசிக்கலானான். அவனுக்கு ஒரு வழி தோன்றியது. மறுநாள் பணக்காரன் அவனைக் கூப்பிட்டு "மலை மீது மூங்கில் துளிர் விட்டிருக்கிறது. நம் எருதை ஓட்டிப் போய் அங்கே மேயவிடு. நீயாக அவற்றைப் பறித்துப் போடாதே" என்றான். வேலையாளும் அப்படி செய்வதாகக் கூறினான்.

அவன் உடனேயே எருதை ஓட்டிக் கொண்டு மூங்கில் காட்டிற்குச் சென்றான். அதை அங்கே ஒரு மூங்கில் முளையில் கட்டி விட்டு ஒரு தடியை எடுத்து "உம். உயர ஏறிப் போ" என்று அடிக்கலானான். மாடோ அடிகளைத் தாங்க முடியாமல் வலியால் துடித்தது. அந்த வழியே போனவர்கள் அதைக் கண்டு சிரித்தார்கள். இந்த விஷயம் பணக்காரன் காது வரை எட்டியது.

அவன் ஓடோடிப் போய் வேலையாளிடம் "மாட்டை அடித்துக் கொல்லவா பார்க்கிறாய்" என்றான். வேயையாளும் "இது சொன்னபடி கேட்கிறதில்லை. மேலே ஏறி மூங்கில் துளிர்களை மேய் என்



றால் ஏறாமல் முரண்டு பிடிக்கிறது. இதனை என்ன செய்கிறேன் பாருங்கள்'' என்று மறுபடியும் அடிக்கலானான்.

உடனே பணக்காரன் "போதும். போதும் மாட்டை வீட்டிற்கு ஓட்டிப் போ'' என்றான். எனவே அவனும் "நீங்கள் சொன்னீர்கள் மாடுதானே மூங்கில் துளிர்களைச் சாப்பிட வேண்டும் என்று நானாகப் பறித்து அதற்குப் போடவும் கூடாது என்றீர்கள். அதனால் மாடு நீங்கள் சொன்னபடியே மேயப்படும் என்று பார்த்தேன். அதுவோ உயரச் செல்ல மறுத்தது. அதனை உயரச் செல்லுமாறு அடித்ததும் பார்த்தேன். ஆனால் இப்போது நீங்கள் இதனை அடிக்க வேண்டாம் என்றும் வீட்டிற்கு ஓட்டிச் செல்லும்படியும் கூறுகிறீர்கள். அதனால் நீங்கள் சொல்கிறபடியே செய்கிறேன்'' என்று கூறி மாட்டை ஓட்டிப் போனான். பணக்காரனுக்கோ அவனை எந்த சாக்கு சொல்லி வேலையிலிருந்து நீக்குவது என்ற கவலை ஏற்பட்டது.

ஒருநாள் அவன் வேலையாளிடம் "நம் வீட்டு கூரை ஓடுகள் பெரிது பெரிதாக உள்ளன. அவற்றின் மீது மண் போட்டு காய்கறிச் செடிகளைப் பயிர் செய்'' என்றான். வேலையாளும் அப்படியே செய்வதாகக் கூறி கூரை மீது ஏறி கடப்பாரையால் ஓடுகளை உடைக்கலானான்.

அதுகண்டு பணக்காரன் "ஏய்!



என்ன இது? ஏன் ஓட்டை உடைக்கிறாய்?'' என்று கேட்கவே அவனும் ''விதை விதைக்கு முன் நிலத்தை நன்கு கிளறினால்தானே நன்கு விளையும்'' என்றான். பணக்காரனும் ''சரி. சரி போதும். நீ காய்கறிச் செடிகள் பயிர் செய்ய வேண்டாம். கீழே இறங்கி வா'' என்றான். வேலையாளும் ''நீங்கள் சொல்கிறபடியே இறங்கி வருகிறேன்'' என்றான். பணக்காரனுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை.

ஒருநாள் பணக்காரன் வேலையாளிடம் ''நம் வயலின் பயிர்கள் வெயிலில் வாடி வதங்குகின்றன. அதனால் நீ போய் வயலை எடுத்து வந்து நம் வீட்டிற்குள் வை'' என்றான். வேலையாளும் ''ஓ! அப்படியே செய்கிறேன்'' என்றான்.

அவன் ஒரு கடப்பாரையை எடுத்து வந்து வீட்டின் முன் பக்கச் சுவரை உடைக்கலானான். அதைக் கண்ட பணக்காரன் ''ஏய்! என்ன இது? ஏன் சுவரை உடைக்கிறாய்?'' என்று கேட்டான். வேலையாளும் ''வயல் மிகவும் பெரிதாயிற்றே. அது இந்த வாசல் வழியாக நுழைய முடியாதே. அதனால் முன் பக்கச் சுவரை இடித்தால் வயலைச் சுலபமாக உள்ளே கொண்டு வந்து விடலாமே'' என் றான்.

பணக்காரன் திகைத்துப் போனான். ஒரு வேலையாள் தன்னை ஏமாற்ற முடியும் என்பதை அப்போது அவன் உணர்ந்தான். அந்த வேலையாள் தான் சொல்வதை எல்லாம் செய்து தனக்கே பாடம் கற்பிப்பதை அவன் உணர்ந்தான். வல்லவனுக்கும் ஒரு வல்லவன் இருப்பான் என்பது அப்போது அவனுக்குத் தெரிந்தது.

பணக்காரனுக்கு அந்த வேலையாளை உடனே நிறுத்திவிட்டாலே தனக்கு மேலும் நஷ்டம் ஏற்படாது என்று தோன்றியது. அதனால் அவன் வேலையாள் கேட்ட பணத்தைக் கொடுத்து அவனை வேலையிலிருந்து விலக்கி விட்டான்.



# அம்புலிமாமா செய்திகள்

## எவரெஸ்ட் சிகரத்தில் பெண்கள்

எவரெஸ்ட் சிகரத்தை அடைந்த முதலாவது பெண்மணி ஜப்பானைச் சேர்ந்த ஜங்கோடாபி. முதலாவது இந்தியப் பெண்மணி பச்சேந்திரி பால். உலகிலேயே இச்சிகரத்தின்மீது இரண்டு முறை ஏறிய பெண்மணி நம் நாட்டைச் சேர்ந்த சந்தோஷி யாதவ். 1993ல் இவர் இந்த சாதனையைப் புரிந்தார். முதன் முறையாக இவர் ஏறியது 1992ல். இரண்டாவது முறையில் இவருடன் குங்போடியா, டிக்கி போல்மா என்ற இரு இளம் பெண்களும் எவரெஸ்ட் சிகரத்தை அடைந்தார்கள். இது பெண்களாகவே அடங்கிய குழு. இதுபோல் பசீந்திரி பால் தலைமையிலும் அடுத்து ஒரு குழு சென்றது. அதில் நீபு சர்மா, ராதா தேவி, சுமன் குடியால், சவீதா மார்மோலியா என்ற நான்கு இளம் பெண்கள் எவரெஸ்ட் சிகரத்தை அடைந்தார்கள். இதே சமயத்தில்தான் நேபாளைச் சேர்ந்த ஷெர்பா அங்கரீடா ஒன்பதாவது தடவையாக எவரெஸ்ட் மீது ஏறி சாதனை படைத்தார்.



## வானவெளியில் உணவு விளம்பரம்

வானத்தில் பெரிய பெரிய பலூன்களைப் பறக்கவிட்டு பல பொருள்களுக்கு விளம்பரம் செய்யப்படுவதை நாம் காண்கிறோம். இவற்றால் மக்கள் கவனத்தை ஈர்க்கமுடியும். விரைவில் ஒரு மைல் நீளமுள்ள பில்போர்டை ஆகாயத்தில் பறக்கவிட ஒரு அமெரிக்க நிறுவனம் முயலப் போகிறது. இதில் உணவு சம்மந்தப்பட்ட விளம்பரங்கள் இருக்குமாம்.

## கடியாரத்தின் வேலைநிறுத்தம்

லண்டன் வெஸ்ட் மினிஸ்டரிலுள்ள பிக்பென் கடியாரம் உலகப் புகழ் பெற்றது. கால், அரை, முக்கால் மணி என அடிக்கும் இக்கடியாரத்தின் மணி ஓசையை உலகம் முழுவதும் கேட்டு மகிழ்ந்து வந்தது ஆனால் அண்மையில் கால் மணிக்கு மணி அடிப்பதை திடீரென்று நிறுத்தி விட்டது. அந்த கடியாரத்தை பழுது பார்த்துச் சரி செய்தார்கள். ஆனால் மே 19ல் ஆறு மணிக்கு அது நின்று விட்டது. இது என்ன என எல்லோரும் யோசிக்கையில் இரவு 9-25க்கு தானாகவே ஓட ஆரம்பித்து விட்டது.





# பிரம்ம முடி

வெகு காலத்திற்கு முன் காசியில் ராஜாங்கம் என்ற இளைஞன் இருந்தான். இவன் சிறு வயதிலேயே தன் தாய் நத்தையரை இழந்துவிட்டான். அவன் பலரது உதவி பெற்று நன்கு படித்து அரசாங்க வேலையிலும் அமர்ந்துவிட்டான்.

அரசாங்க வேலை கிடைத்த பின் அவனது வாழ்க்கைச் சக்கரம் தங்கு தடையின்றி சுழன்று கொண்டே சென்றது. அவனுக்குத் தனியாக இருக்கப் பிடிக்கவில்லை. எல்லா வாலிபர்களைப் போலவே தானும் கல்யாணம் செய்து கொண்டு குழந்தையும் குடித்தனமுமாய் இருக்க வேண்டும் என்று அவன் விரும்பினான்.

அவன் ஒரு சத்திரத்தில் இருந்து அங்கேயே சாப்பிட்டும் வந்தான். கொஞ்ச நாட்களானதும் அவனுக்குக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. தாய் தந்தையர் இருந்திருந்தால் அவர்கள் அவனுக்கு எப்போதோ கல்யாணத்தைச் செய்து வைத்திருப்பார்களே.

கல்யாணம் என்றால் யாராவது ஒருவரது உதவி பெற்றால் தானே நடக்கும். அதனால் ராஜாங்கம் தன் நண்பன் ஒருவனிடம் அதுபற்றிக் கூறினான். அவனும் "எனக்குத் தெரிந்த அரசாங்க உயர் அதிகாரி ஒருவர் இருக்கிறார். அவர் தம் மகளுக்கு ஏற்ற மணமகன் கிடைப்பானா என்று பார்த்துக் கொண்டிருக்கிறார். நான் அவரிடம் பேசி முடிவைத் தெரிந்து வருகிறேன். நீ நாளை அதிகாலை மணி கர்ணிகா கட்டத்தில் எனக்காகக் காத்திரு" என்றான்.

—பாபநாசம் சாமா—

அன்றிரவு ராஜாங்கத்திற்குத் தூக்கமே வரவில்லை. எப்போது விடியும், மணிகர்ணிகா கட்டத்தில் தன் நண்பனைச் சந்தித்து அவன் கூறுவதைக் கேட்கலாம் என்று துடித்துக் கொண்டிருந்தான். வெளியே வெளிச்சம் நிறைய இருந்ததால் விடிந்துவிட்டது என்று எண்ணி அவன் மணிகர்னிகா கட்டடத்திற்கு ஓடினான்.

அப்போது பொழுது புலரவில்லை. அவன் கண்ட வெளிச்சம் நிலாவின் ஒளியே. அவன் மணிகர்ணிகா கட்டத்தை அடைந்த போது யாருமே இருக்கவில்லை. தன் நண்பனை எதிர்பார்த்து அவன் அங்கே உட்கார்ந்திருந்தான். அப்போது சற்று தூரத்தில் யாரோ ஒருவர் உட்கார்ந்திருப்பதை அவன் கண்டான். அவரோடு பேசிப் பொழுதைப் போக்கலாம் என எண்ணி ராஜாங்கம் எழுந்து சென்றான்.

அங்கு உட்கார்ந்திருந்தவர் ஒரு கிழவர். அவர் அந்த நிலா வெளிச்சத்தில் பனை ஓலைகளில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். ராஜாங்கம் அவர் பின் நின்று அவர் என்ன எழுதுகிறார் என்று பார்த்தான். அது அவனுக்குப் புரியவில்லை.

அவன் கிழவனிடம் அதுபற்றிக் கேட்கவே "இது சூரியோதயத்திற்கு முன் பிறக்கும் குழந்தை



களின் ஜாதகம். நான் எழுதுவது பிரம்மலிபி. அது உனக்குப் புரியாதுதான்" என்றார். அது கேட்டு ராஜாங்கம் அந்தக் கிழவர் படைப்புக் கடவுளான பிரம்மாவாகத் தான் இருக்க வேண்டும் என நினைத்தான்.

சற்று நேரமானதும் கிழவர் எழுதுவதை முடித்துவிட்டு ஒரு பையிலிருந்து சிவப்பு வெள்ளைப் பாசி மணிகளை எடுத்து ஒரு சிவப்பு பாசி மணியுடன் ஒரு வெள்ளைப் பாசி மணியை வைத்து முடிபோடலானார். அது கண்டு ராஜாங்கம் இது என்ன முடி? என்று கேட்க அவரும் "இது பிரம்ம முடி.இன்னவனுக்கு இன்ன



வள்தான் மனைவியாக வேண்டும் என நான் தீர்மானிப்பது'' என்றார்.

அப்போது ராஜாங்கம் "அப்படியானால் என்னை மணக்கப் போகும் பெண் யாரென்று சொல்ல முடியுமா? நான் ஒரு பெண்ணைப் பற்றித் தீர்மானம் செய்திருக்கிறேன். என் நண்பன் சம்மந்தப்பட்டவர்களிடம் பேசிக் கல்யாணத்தை நிச்சயம் செய்து கொண்டு வருவதாகச் சொல்லிப் போயிருக்கிறான் இன்னும் அரை நாழிகைக்குள் அவன் வந்து விடுவான். எனவே இன்னும் சற்று நேரத்தில் அது உறுதியாகத் தெரிந்துவிடும்'' என்றான். கிழவர் நிமிர்ந்து அவனைப் பார்த்து "உன் விவாகம் இவ்வளவு விரைவில் நடந்துவிடாது. நீ மணக்கப் போகும் பெண் பத்து வயதில் தான் இருக்கிறாள். அவளது பதினாறாவது வயதில்தான் உனக்கும் அவளுக்கும் விவாகம் நடக்கும்'' என்றார்.

அப்போது ராஜாங்கம் "இன்னும் ஆறு வருடங்களா காத்திருக்க வேண்டும்? நான் இதை நம்ப மாட்டேன்'' என்றான். அப்போது கிழவர் "அதோ பார். அந்த ஒற்றைக் கண் பெண்ணுடன் ஒரு சிறுமி போகிறாளே. அவள் தான் உன் மனைவி'' என்றார்.

ராஜாங்கம் உடனே எழுந்து ஓடிப்போய் கங்கையில் குளிக்கப் போய்க் கொண்டிருந்த அந்தப் பெண்ணைப் பார்த்தான். அவளுக்கு ஒரு கண் இருக்கவில்லை. அவள் தன்னுடன் வந்த அச்சிறுமியை கங்கையில் இறக்கிக் குளிப்பாட்டலானாள். அச்சிறுமியா தனக்கு மனைவியாகப் போகிறாள் என்று நினைத்து ராஜாங்கம் மனம் வருந்தினான்.

அவன் திரும்பி வந்து பார்த்த போது கிழவர் அந்த இடத்தில் இருக்கவில்லை. எங்கும் தென்படவும் இல்லை. தன் நண்பனும் வராது போகவே அவன் மேற்கொண்ட பணி நிறைவேறவில்லை என நினைத்து ராஜாங்கம் சத்திரத்

திற்குத் திரும்பி சென்றான்.

வழியில் அரசாங்கக் காவலாளி ஒருவனை அவன் கண்டான். அவனிடம் மணிகர்ணிகா கட்டத்தில் ஒற்றைக் கண் பெண்மணியுடன் சிறுமி வடிவில் ஒரு பிசாசு இருக்கிறது. இப்போதே போய் அதைக் கொன்றால் உனக்குப் பத்து வராகன்கள் பரிசு'' என்றான். அக் காவலாளியும் அந்தப் பிசாசைக் காட்டும்படிக் கூறவே ராஜாங்கம் அவனை மணிகர்ணிகா கட்டத்திற்கு அழைத்துப்போய் அப்போது குளித்துவிட்டுக் கரைக்கு வந்து கொண்டிருக்கும் பெண்மணியையும் சிறுமியையும் காட்டினான்.

காவலாளியும் தான் அவளைக் கொல்வதாகக் கூறி ராஜாங்கத்தை அனுப்பிவிட்டு அந்த ஒற்றைக் கண் பெண்ணைத் தொடர்ந்து சென்றான். அவன் அச்சிறுமியைக் கொல்லக் கத்தியை உயர்த்தியபோது அவள் பார்த்த பார்வை அவன் மனதை இளக்கிவிட்டது. எனவே அவன் அச்சிறுமியின் கண் ஓரமாகக் காயப்படுத்தி விட்டு ஓடிப்போனான்.

அவன் ராஜாங்கத்தைக் கண்டு தான் பிசாசைக் கொன்றுவிட்டதாகக் கூறிப் பரிசையும் வாங்கிக் கொண்டான். அதற்குப்பின் ராஜாங்கம் தன் மணம் பற்றி எவ்வளவு முயன்றாலும் எவ்விதப் பயனும் இல்லாது போயிற்று.



ஆறு ஆண்டுகள் கழிந்தன. ராஜாங்கம் பதவி உயர்வும் பெற்றான். ஆனால் திருமணந்தான் ஆகவில்லை. அப்போது அவனது உயர் அதிகாரியாக புதிதாக ஒருவர் வந்தார். அவர் ராஜாங்கத்தின் நற்குணங்களைக் கண்டு அவனைப் பற்றி விசாரித்தார். அவனுக்கு இன்னமும் திருமணமாகவில்லை என்பது தெரிந்தது.

அவர் ராஜாங்கத்திடம் "நீ திருமணம் செய்து கொள்ள விரும்பவில்லையா?'' என்று கேட்கவே அவனும் "அதொன்றும் இல்லை. பல சம்மந்தங்கள் வந்தும் எதுவும் சரியாக அமையவில்லை'' என்றான்.

அந்த அதிகாரியும் எனக்கு ஒரு மகள் இருக்கிறாள். நன்றாகப் படித்தவள். வீட்டையும் பொறுப்புடன் கவனித்துக் கொள்வாள். நீ அவளை மணந்து கொள்கிறாயா?" என்று கேட்டார். ராஜாங்கமும் அதற்குச் சம்மதிக்கவே அவனது திருமணம் அப்பெண்ணுடன் நடந்தேறியது.

நிறைய நகைகளுடனும் சீருடனும் வந்த அப்பெண் ராஜாங்கத்தின் வாழ்க்கையையே இன்பமயமாக்கி விட்டாள். ஆனால் தன் மனைவி எப்போதும் தலைமயிரால் கண் வரை உள்ள பகுதியை மறைத்து அதில் ஒரு சடை பில்லை போன்ற ஆபரணத்தை வைத்துக் கொள்வதைக் கவனித்தான்.

அதுபற்றி அவன் தன் மனைவியிடம் கேட்க அவளும் "நான் பத்து வயதுச் சிறுமியாக இருந்தபோது ஒருவன் என் கண்ணின் பக்கம் குத்திவிட்டான். அந்தத் தழும்பை மறைக்கவே இது" என்றாள்.

ராஜாங்கமும் "இது மணி கர்ணிகா கட்டத்தில் நடந்ததா? அப்போது உன் தாயார் உன்னுடன் இருந்தாளா? அவளுக்கு ஒரு கண் இல்லைதானே" என்று கேட்டான்.

"இது எப்படி உங்களுக்குத் தெரியும்? அந்த ஒற்றைக் கண் பெண்மணி எங்கள் வீட்டு வேலைக்காரி, என் தாயார் அல்ல" என்றாள். அப்போது ராஜாங்கம் மணிகர்ணிகா கட்டத்தில் தான் கண்ட கிழவர் பற்றிக் கூறவே அவளும் "அப்படியானால் அவர் பிரம்மாவாகத்தான் இருக்க வேண்டும்" என்றாள்.

ராஜாங்கமும் "ஆமாம் அவர் போட்ட முடிதான் பலித்துவிட்டது. நான் என் கல்யாணத்திற்காக எவ்வளவோ முயன்றேன். ஆனால் அவர் அன்று அவர் கூறிய படி ஆறு வருடங்கள் காத்திருந்து உன்னை மணக்க வேண்டியதாயிற்று. அவரது முடிவை மாற்ற முடியாதுதான்" என்றான்.



# இயற்கை விநோதங்கள்

## தென்னை மரம்

தென்னை மரத்தின் ஒவ்வொரு பாகமும் மனிதனுக்கு உபயோகப்படுகிறது. இளநீர் வைட்டமீன்கள் நிறைந்த ஆரோக்கியகரமான பானம். இளந்தேங்காய் வழுக்கையை வழித்துச் சாப்பிடுகிறார்கள். தேங்காய் பருப்பைச் சமையல்களில் பலவிதத்தில் பயன்படுத்துகிறார்கள். தேங்காய் எண்ணெய் கேச வளர்ச்சிக்கு ஏற்றது. சோப்பு, மருந்து போன்றவற்றில் இந்த எண்ணெயை உபயோகப்படுத்துகிறார்கள். தேங்காய் புண்ணாக்கை மாடு, எருமைகளுக்குத் தீவனமாகக் கொடுக்கிறார்கள். தேங்கா



யின் ஓடுகளால் பொம்மைகளையும் அலங்காரப் பொருள்களையும் செய்கிறார்கள். தென்னை நாரால் கயிறுகளையும் பாய்களையும் செய்கிறார்கள். ஓலைகளை முடைந்து வீட்டுக் கூரைகளில் பயன்படுத்துகிறார்கள். தென்னம் ஈர்க்குச்சிகளால் துடப்பம் தயாரிக்கிறார்கள். தென்னைமர அடிப் பாகத்தை குடிசைகளில் உத்திரமாகவும் சட்டமாகவும் தூணாகவும் உபயோகப்படுத்துகிறார்கள். தென்னை மரம் சுமார் 25 மீட்டர் உயரம் வளரும். நாற்று நட்டு ஐந்தாறு வருடங்களில் காய்க்கத் தொடங்கும். நல்ல ஜாதித் தென்னை வருடத்திற்கு 300 காய்கள் வரை கொடுக்கும்.

## கர்பப்பை கொண்ட நீர்க்குதிரை

நீர்குதிரைகள் எனப்படும் மீன்போன்ற இனம் கடலில் கரை ஓரமாக ஆழமில்லாத இடத்தில் வாழ்பவை. இது மீன் நீந்துவது போலப் படுகை மட்டத்தில் நீந்தாமல் எம்பிக் குதித்து நீந்தும். இதன் முகம் பார்க்கக் குதிரைபோல இருப்பதால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டது.



பெண் நீர்க்குதிரை ஆண் நீர்க் குதிரையின் வயிற்றின் அடிப்பாகத்திலுள்ள பைக்குள் முட்டைகளை இடும். ஒரு தடவைக்கு இவ்வாறு இடப்படும் இரு நூறு முட்டைகளை ஆண் நீர்க் குதிரை காக்கும் முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளிவரும்போது அந்தப் பை தானே திறந்து கொள்ளும்.

Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 அக்டோபர் மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



P.R. Murthy

* தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். * ஆகஸ்டு 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
* எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. * தலைப்பு களை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## ஜூன் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **பருகப் பருக குளிர்ச்சி**

இரண்டாவது போட்டோ: **பார்க்கப் பார்க்க மகிழ்ச்சி**

பரிசு பெற்றவர்: **ச. லதா, கல்பாக்கம்**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

